# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



"எனக்கு வாய்ப்பூட்டுப் போடமுடியாது"

KALKI • 08.06.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

# கடவுளின் தூதுவர்கள்!

உ
ஸ்வாமிநாதஸ்வாமி துணை

கல்யாணமா! கவலையே வேண்டாம்!!

# ஜெ.கே.

## மேரேஜ் கேட்டரிங் சர்வீஸ்



**Best Catering in Tambaram**

பிளாட்- 32, ஜெயலக்ஷ்மி நகர், சந்தோஷ்புரம், சென்னை-600 073.

73, எம்ஜிஆர் தெரு, (சர்வமங்கள விநாயகர் கோவில் அருகில்) நங்கநல்லூர் சென்னை - 63.

நளபாக மாமணி
குடந்தை ஜெ. கிருஷ்ணமூர்த்தி ஐயர்

போன்: 2278 0769/ 2278 1483/ 98418 21327/ 98418 21328

கல்யாணம் மற்றும் அனைத்து விசேஷங்களுக்கும் தங்கள் பட்ஜெட்டுக்குள் காண்பவர் பாராட்டும்படி எல்லா ஏற்பாடுகளையும் நாங்களே முழு பொறுப்பு ஏற்று மிக மிக குறைந்த செலவில் மிகவும் சிறப்பான முறையில் தங்கள் விருப்பம் போல் செய்து தர காத்திருக்கிறோம்.

### திருமணத்திற்கு நாங்கள் செய்து தரும் ஏற்பாடுகள்

- கல்யாண மண்டபம்
- மங்கள வாத்தியம்
- பூ,மாலை வகைகள் வேண்டிய அளவு
- அங்குமணி சாமான்கள் ஜீப்பெட ஜாதுடன்
- வைதிகாள் சாமான்கள்
- தாம்பூல (தேங்காய்) பை பிரிண்டிங் கவருடன்
- சீர்பட்சணங்கள் இருவர் ஆத்துக்கும்
- மண்டபம் கோலம் ஏற்பாடுகள்
- ஆரத்தி பச்சைப்புடி ஏற்பாடுகள்
- முதல்தர சாப்பாடு டிபன் வகைகள்
- 24 மணி நேர காபி, டீ, பூஸ்ட், பால்
- குடந்தை வெற்றிலை, சீவல், ரசிக்லால் பாக்கு பீடா
- யூனிபார்ம் சர்வீஸ்
- பேப்பர் ரோல், மினரல் வாட்டர்
- காசியாத்திரை சாமான்கள் (பட்டுபாய்,குடை,வாக்கிங் ஸ்டிக்)
- கூல் வாட்டர் மற்றும் ஹாட் வாட்டர்
- தங்களை வரவேற்க இன்முகத்துடன் ஆட்கள்
- டைனிங் ஹாலில் உபசரிக்க ஆட்கள்
- வைதிகாளுக்கு சாமான்கள் கொடுக்க ஆட்கள்
- காபி ஸ்டால் மற்றும் ஜூஸ் ஸ்டால்

திருமணத்திற்கு எல்லா ஏற்பாடுகளையும் நாங்கள் உங்கள் ஒத்துழைப்புடன் செய்து தர காத்திருக்கிறோம். இவ்வளவு வசதிகள் செய்து விட்டு பணம் அதிகம் இருக்கும் என்று எண்ணி விடாதீர்கள். உங்கள் பட்ஜெட் எப்படியோ அதைவிட குறைவாக நாங்கள் செய்து தருகிறோம். உங்கள் இல்லத்தில் திருமணம் என்றால் எங்களை ஒருமுறை அணுகுங்கள். பிறகு இவரை பார்க்காமல் விட்டுவிட்டோமே என்று வருந்த வேண்டாம்.

ஆர்டரின் பேரில் அனைத்து விசேஷங்களுக்கும் 25 நபருக்குமேல் முதல்தர சாப்பாடு, டிபன், காபி மற்றும் சீர்பட்சணங்கள் உங்கள் இல்லத்துக்கே வந்து சர்வீஸ் செய்து தருகிறோம்.





**உண்மையான உழைப்பே உயர்வு தரும்**



# காதல் என்றால் என்ன?

டைட்டில்லேயே கேள்விக் குறியை வைத்துவிட்டு, கதையில் விளக்கம் சொல்லப்பட்ட விதம் அருமை. கதைக்களம் புது முயற்சின்னு பாராட்டினாலும், திரைக்கதையில் கவனம் செலுத்தியிருக்கலாம்.

ஹீரோ வீரா, நடிப்பில் காட்டிய ஆர்வம் நம்மை ரசிக்க வைக்கிறது. ஹீரோயின் தியா கவர்ச்சி தேவதை, கனவுக் கன்னி, நடிப்பிலும் ராணி. சரண்ராஜ் வரும்போது விசில் பறக்குது; அவருக்கேத்த கேரக்டர்; கண்டிப்பா பேசப்படும். மாணிக்க விநாயகம் அப்பாவா வாழ்ந்து காட்டியிருக்கிறார். மயில்சாமி, வாசு விக்ரம், சிங்கமுத்துன்னு காமெடி சரவெடி இருந்தாலும், போனஸா இயக்குநர் காளிமுத்துவும் சேர்ந்து சிரிக்க வைச்சுருக்காரு.

கதையில் ஆக்‌ஷனைக் கொறைச்சு யதார்த்த வாழ்க்கையைச் சொல்லியிருக்கலாம். புகழேந்தி, பா.விஜய், நந்தலாலா பாடல் வரிகளுக்கு, பாரதி இசை தேன் அருவி. கருப்பையா ஒளிப்பதிவு யதார்த்தம். ரவிதேவ், ஜிவித், பவர் சிவா நடனம் ரசிகர்களுக்குப் பொழுதுபோக்கு. சிந்திக்க வைக்க நிறைய விஷயம் இல்லாவிட்டாலும்கூட, சிரிச்சுப் பொழுது போக்கக்கூடிய வகையில் திரைக்கதையைக் கொடுத்த இயக்குநர் காளிமுத்துவைப் பாராட்டலாம்.

**காதல் என்றால் என்ன?** இளைஞர்களுக்கு மட்டும்.

- அம்ருதா

# 'கோப' டான்ஸ் ஆடியதில்லை!



சின்னத்திரையில் நீண்ட காலமாக 'ஸ்டார்' அந்தஸ்தில் வலம் வருபவர் விஜய் ஆதிராஜ். நாம் கேட்ட கேள்விகளுக்கு அவரும், மனைவி ரஷ்னாவும் அளித்த பதில்கள்...







◆ சிரிப்பு மனுஷனுக்குத் தேவையான ஒன்னுங்க! அது இல்லாட்டி வாழ்க்கை சுவாரசியம் இல்லாமப் போயிடும்! அதுக்குன்னு பிறரைச் சிரிக்க வைக்க வடிவேலு ரேஞ்சுக்கு கோமாளித்தனமெல்லாம் செய்யமாட்டேன்.

◆ இவர் சாப்பாட்டு விஷயத்துல ரொம்ப வித்தியாசமானவர் 'வீட்டுல' இவருக்கு தனியா சமையல் செய்யணும். இவர் 'ருசி'கூட... உப்பு, காரம், உவர்ப்பு... இனிப்பு எல்லா வகையிலும் வேறுபடும். ஆனா, சாப்பாட்டு விஷயத்துக்காக ஒரு நாள் கூட 'கோப டான்ஸ்' ஆடியதில்லை.

◆ நான் சினிமாவுல ஹீரோவா நடிக்கணுமுன்னு எங்கப்பா ரொம்ப ஆசைப்பட்டாங்க! ஆனா, அது நடக்கல. எங்கப்பா ஆசையை வேற மாதிரி நிறைவேற்றப் போறேன். ஒரு டைரக்டராகவோ தயாரிப்பாளராகவோ அவதாரம் எடுத்து.







◆ நாங்க 'லவ்' பண்ணித்தான் மேரேஜ் செய்துக்கிட்டோம். எங்க ரியல் வாழ்க்கை ரொம்ப ஜாலிங்க. நாங்க 'ஜோடி நம்பர் ஒண்ணு'ல ஆடினோம். ஆனால், இனிமே ஆடறதுக்கு வாய்ப்பு வந்தாலும் ஆடறதா இல்லீங்க.

◆ யாரும் பணம் சம்பாதிக்கணும்ங்கற நோக்கத்துக்காக நடிக்கறதுக்கு வர்றதில்லீங்க... நான் இந்த ஃபீல்டுக்கு வந்து பதிமூணு வருஷம் ஆகுது. நம்மால முடிஞ்ச வரைக்கும் நாலு பேருக்கு நல்லதும்... கொஞ்சமா கலைச்சேவையும் செய்யணுமுன்னுதான் நினைக்கிறேன்.

– சிவக்குமார்







கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

“பதினஞ்சு நாளுக்கு ஒரு முறை, பொன்னீம் மருந்தை என் நிலத்துல தெளிச்சேன். ரொம்ப சிறப்பான மகசூல் கிடைச்சிருக்கு. என்னடா ஏதோ சின்னப் பசங்க வந்து, ஏதோ சொல்லுதுங்கன்னு ஆரம்பத்துல எனக்குத் தயக்கமாத்தான் இருந்துச்சு. ஆனா, அந்தப் பசங்களோட நம்பிக்கை என்னை மட்டுமில்ல, என்னை மாதிரி பல விவசாயிகளை மிரள வைச்சிருச்சு. இன்னைக்கு, திருவள்ளூர் மாவட்டத்துல பலரும் தங்களோட நிலங்களுக்கு இந்தப் பசங்க கொண்டு வந்த ‘பொன்னீம்’மத்தான் உபயோகப்படுத்தறோம். கடவுள் அனுப்பின தூதர்களாகத்தான் நாங்க இவங்களப் பார்க்கிறோம்'' என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகிறார் சென்னையை அடுத்த பட்டாபிராமைச் சேர்ந்த விவசாயி ஏழுமலை.

சென்னை லயோலா கல்லூரியைச் சேர்ந்த பூச்சியியல் துறைத் தலைவரும், புகழ்பெற்ற விஞ்ஞானியுமான அருட்தந்தை இன்னாசிமுத்துவும், மரிய பாக்கியமும் கண்டறிந்த இயற்கை பூச்சிக் கொல்லிதான் ‘பொன்னீம்’. இதனை பூச்சியியல் துறை ஆய்வு மாணவர்களுடன் இணைந்து, லயோலா கல்லூரியின் SIFE (Students Initiative for Free Enterprises) மாணவர்கள் விவசாயிகளிடம் எடுத்துச் செல்ல, ‘பக்’கென்று பற்றிக் கொண்டுவிட்டது.

‘‘கெமிக்கல் பூச்சிக் கொல்லி மருந்துதான் ஆந்திராவுல பல விவசாயிகளோட தற்கொலைக்குக் காரணம். சரியான மகசூல் தராம, பயிர்களையே காவு வாங்கற, ஒரு விஷயமாத்தான் இது இன்னைக்கும் இருக்கு. கெமிக்கல் பூச்சிக்கொல்லி தெளிக்கப்பட்டு அறுவடை செய்யப்படுற எந்தப் பொருளும், மக்களுக்கு மிக மோசமான உடல்நலக் குறைபாடுகளை ஏற்படுத்தும்ங்கறது கண்டறியப்பட்ட உண்மை. இந்த நிலையை மாத்தணும்னு பல வருஷங்களாக ஆராய்ச்சி செஞ்சுட்டு வந்தோம். ஏற்கெனவே நம்மகிட்டே இயற்கை பூச்சிக் கொல்லிகள் இருக்கு. அவையெல்லாம் வெறும் வேப்பம் எண்ணெயை மட்டும் அடிப்படையாகக் கொண்டவை. ஆனா இப்ப கண்டுபிடிச்சுருக்கிற ‘பொன்னீம்’, வேப்பம் மற்றும் புங்கம் எண்ணெயைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. இந்த ஃபார்முலா மிக அதிகமான மகசூலுக்கு வழிவகுக்குது'' என்கிறார் விஞ்ஞானி அருட்தந்தை இன்னாசிமுத்து.

# கடவுளின்


★ அருட்தந்தை இன்னாசிமுத்து

பூச்சியியல் நிபுணர் கேப்ரியல் பால்ராஜ் தலைமையில்தான் மாணவர்கள் விவசாயிகளைச் சந்தித்துள்ளனர். ‘‘ஸ்டூடண்ட்ஸோட பங்கு ஆத்மார்த்தமானது. ராத்திரி பகல்னு பார்க்காம விவசாயிகளைச் சந்திச்சுப் பேசியிருக்காங்க. இன்னைக்கு அவங்களோட உழைப்புக்கு அங்கீகாரம் கிடைச்சுருக்கிறது'' என்று நெகிழ்ந்தார் பால்ராஜ்.

‘‘எங்க பலமே ஒற்றுமைதான். இன்னும் SIFE ஸ்டூடண்ட்ஸோட ஆதரவும் இருக்கப்போக, எல்லாமே எளிதாயிடுச்சு. முதல்ல SIFE ஸ்டூடண்ட்ஸ் ஸ்பாட் விசிட் செஞ்சு, விவசாயிகள்கிட்ட பேசுவாங்க. பொன்னீம் பத்திச் சொல்லி அவங்களைக் காது கொடுத்துக் கேக்க வைப்பாங்க. இயற்கை பூச்சிக்கொல்லியோட மகிமையையும் அதனால ஏற்படுற



★ பாஸ்கர், நாட்டுத்துரை, எழில் வேந்தன், மகேஸ்வரன்

SIFE இருக்கு. ஒவ்வொரு அமைப்புலயும் எத்தனை பேர் வேணா சேரலாம். ஆனா, அஞ்சு பேர் மட்டும்தான் செயல்படற மெம்பர்களா இருப்பாங்க. செயல்படுத்தப் படுற பணிகள் மக்களுக்கும் மாணவர்களுக்கும் ஆக்க பூர்வமா இருக்கணும்ங்கறது தான் ஒரே கண்டிஷன்'' என்கிறார் பேராசிரியரும் லயோலாவின் SIFE ஒருங்கி ணைப்பாளருமான ஜெய ஷாந்தி.

# தூதுவர்கள்!




''போன வருஷம் சுனாமியால பாதிக்கப்பட்ட மக்களை மீட்டெடுக்கும் செயல் திட்டத்தைக் கையி லெடுத்தது லயோலா SIFE. இந்த வருஷம் நாங்க 'பொன்னீம்' ப்ராஜக்டைத் தொட்டி ருக்கோம். அருட் தந்தை இன்னாசிமுத்து தான், நாங்க மக்கள்கிட்ட இந்தத் திட்டத் தைக் கொண்டுபோக உதவியா இருந்தாங்க. நாங்க விவசாயிகளைச் சந்திக்கப் பேசும் போதுதான் தெரிஞ்சுது, அவங்க நல்ல ஒரு மாற்றம் வேண்டி காத்திருக்காங்கன்னு. 'பொன்னீம்' பத்திச் சொன்னதும் அவங் களுக்கெல்லாம் ரொம்ப சந்தோஷ மாயிடுச்சு. பல விவசாயிகள் தங்களோட நிலங்களைப் பரிசோதனைக்குத் தர ஒப்புக் கிட்டாங்க. அவங்க எல்லோருக்கும் எங்க

நன்மைகளையும் பட்டியலிடுவாங்க. விவசாயிகள் பொன்னீமை உபயோகப் படுத்தற நேரத்துல சந்தேகங்கள் வரும் போது, நாங்க போய் டெக்னிக்கலா சொல்லி அவங்களோட வேலையை எளிதாக்குவோம்'' என்றனர் பூச்சியியல் துறை மாணவர்களான பாஸ்கர், நாட்டுத் துரை, எழில்வேந்தன், மகேஸ்வரன், லிங்கதுரை ஆகியோர்.

"SIFE என்பது உலகளாவிய கல்லூரி களுக்கு இடையேயான ஒரு மாணவர் அமைப்பு. உலகம் முழுக்க ஐம்பது நாடுகள்ல இது செயல்படுது. கிட்டத்தட்ட 27,000 உறுப்பினர்கள் இதுல இருக்காங்க. தலைமையகம் யு.எஸ்.ஏ.ல இருக்கு. சென்னையில மட்டும் 30 கல்லூரிகள்ல

நன்றி'' என்றார் லயோலா SIFE பிரசிடென்ட் ஆன்டனி ராபின்சன்.

''இந்த ப்ராஜக்ட்ல ராத்திரி பகல்னு பார்க்காம ஈடுபட வேண்டி இருந்துச்சு. நான் ஒரு பெண்ணுங்கறதால பல நடைமுறை சிக்கல்கள் வேற. எல்லாத்துக்கும் என் நண்பர்கள் ரொம்ப உதவியா இருந்தாங்க. என் பெற்றோர் ஆதரவும் மறக்க முடியாதது. எங்களோட கடின உழைப்பால, இன்னைக்கு திருவள்ளூர் மாவட்டத்தோட பெரும்பாலான விவசாயிகள் பொன்னீமுக்கு மாறிட்டாங்க'' என்கிறார் ஜினு ஆப்ரஹாம். ஐந்து பேர் கொண்ட லயோலா SIFE டீமின் ஒரே பெண்.

மாணவர்கள் சாம்சன் மற்றும் செந்தில்குமார் நம்மிடம் பேசும்போது, ''பொன்னீமோட ஸ்பெஷாலிடியே விலை குறைவான விஷயம் என்பதுதான். இன்னொன்று ஈஸியா இருக்கற அதோட ப்ரிப்பரேஷன். விவசாயிகள் இதை கப்புன்னு பிடிச்சுக்கிட்டாங்க. தாங்களே பொன்னீமைத் தயாரிச்சு, தங்களோட வயல்ல தெளிக்க ஆரம்பிச்சிட்டாங்க. அந்தந்த ஊர்ல இருக்கற சுயஉதவிக் குழுக்கள், 'பொன்னீம்' தயாரிக்கற தொழிற்சாலை தொடங்கவும் ரொம்ப ஆர்வமா இருக்காங்க. இதையெல்லாம் பார்க்கும் போது மனசுக்கு ரொம்ப நிறைவா இருக்கு'' என்றனர்.



கேப்ரியல் பால்ராஜ்



ஏழுமலை



ஜெயஷாந்தி



ராபின்சன், சாம்சன், ஜினு

''தமிழக அரசும் இந்த 'பொன்னீம்' விஷயத்துல கவனம் செலுத்தி, தமிழகம் முழுக்கவுள்ள விவசாயிகளுக்கு வழங்க ஏற்பாடுகள் செஞ்சா நல்லா இருக்கும். அதுக்காக எங்க ஃபார்முலாவை அரசுக்குத் தரவும் நாங்க தயாரா இருக்கோம்'' என்கிறார் இன்னாசிமுத்து.

லயோலா பூச்சியியல் துறை, பொன்னீமை அடுத்து, அடுத்த ப்ராஜக்டிலும் அடியெடுத்து வைத்துவிட்டது. காசநோயை உண்டாக்கும் காரணிகளைக் கண்டறிந்து, அவற்றுக்கான எதிர் மருந்தை உணவின் மூலம் அதாவது, பயிர்கள் வளரும்போதே இணைந்து கொடுத்து காசநோயை வரவிடாமல் செய்வது. இண்டியன் கவுன்சில் ஆஃப் மெடிக்கல் ரிசர்ச், இதற்கு அங்கீகாரம் அளித்துவிட, முழு வீச்சில் ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. அட்வான்ஸ் வாழ்த்துகள்!

– மு.மாறன்

அட்டை, மற்றும் படங்கள்: ஸ்ரீஹரி

# GOKULAM

June 2008
Now on Sale

THE Magazine for Children




## My Teacher, My Friend!

- Cover Story

Rs.10/- Only

## IPL Heroes - Poster

## Potter Mania - Special Pages



# காஃபி ஷாப்

உச்சி மண்டையில, 'நச்'னு குத்திய லால சொடக்குப் போடற மாதிரி இருக்கற வெயில்ல, சும்மா ஹாயா ரவுண்ட் கட்டி அரட்டை அடிக்கிறாங்க சம்மர் கம்ப்யூட்டர் கோர்ஸ் படிக்கிற(!) இந்தப் பொண்ணுங்க...

''யேய் மஞ்சு! உனக்கு இருக்குற கொஞ்சூண்டு மூளையை யூஸ் பண்ணி கொஞ்சம் யோசிச்சுப் பாரேன்... வாரத்துல ரெண்டு 'சன்டே' இருந்தா எப்படி இருக்கும்!? என்று சிந்தனைக் களஞ்சியமாய்க் கேள்வி எழுப்பினார் சுவாதி.

''சுவாதி... 110 டிகிரி அளவுக்கு வெயிலு அடிக்கும்போதே நினைச்சேன். உனக்கு ஏதாவது ஆகப் போகுதுன்னு. அது கரெக்டா ஆகிப் போச்சு'' என்று மஞ்சு செல்லமாய் அடிப்பதற்குக் கையை ஓங்கும்போது, அபயம் அளிக்கும் அவதாரமாக வந்தார் ஹேமா. ''சுவாதி சொன்ன மாதிரி ரெண்டு சன்டே வந்தா... அதை நான் ரொம்ப யூஸ்ஃபுல்லா பயன்படுத்துவேன். அதாவது சாப்பிடுவேன்... தூங்குவேன்... சாப்பிடுவேன்... தூங்குவேன்... அப்புறம்... சாப்பிட்டுத் தூங்குவேன்...'' என்று இழுத்துக் கொண்டே போனார்.




'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்'னு இரண்டு முறை அழுத்தம் திருத்தமா பாடி வைச்ச நம்ம முன்னோர்களோட பைனாகுலர் புத்திக்கு ஜே!

''ஹேமா, அல்ரெடி நீ ஒரு பொம்பள கும்பகர்ணன்கிறது ஊரறிஞ்ச விஷயம்''

# வாரத்துக்கு



என்று கூடிவாளம் போட்ட கார்த்தி காவுக்கு, அடுத்த கேள்வியைத் திருப்பி அனுப்பினார் ஹேமா.

''எங்ககிட்ட யேவா.... நாங்கெல்லாம் யாரு தெரியும்ல... 'ஃப்ரீயா' கிடைச்சா ஃபினாயிலக்கூட குடிப்போம். ரெண்டு சன்டேன்னா சும்மா உட்ருவோமா? கூடச்சுடச் சாப்பிட்டுக்கிட்டே இருப்போம். அதாவது நிறைய தீனி வகைங்களா எடுத்து வைச்சுக்கிட்டு ஒண்ணு ஒண்ணா எடுத்து வாயில போடணும்... எப்படி... என் ஐடியா...'' என்று கார்த்திகா சொன்னதும், ''சாப்பிடறதைத் தவிர உங்களுக்கெல்லாம் ஒண்ணுமே தெரியாதா? நான் டான்ஸ் கத்துக்குவேன்'' என்று சீரியஸாகப் பேசினார் கலைவாணி.

''யேய் கலை... என்ன 'மானாட மயிலாட' புரோகிராமுக்குப் போகப் போறியா?'' என்று ஏகத்துக்கு வம்பிழுத்தார் மஞ்சு.

''ஹலோ... எல்லாரும் கொஞ்சம் ஸ்பீக்கர் ஆஃப்

## கெஸ்ட் டயலாக்!

பிடிச்சவங்க பக்கத்துல இருந்தா எல்லா நாளும் சன்டே! பிடிக்காதவங்க கூட இருந்தா சன்டேவும் மன்டே!

# இரண்டு சன்டே?



ஹேமா




பண்ணுங்க. நாம இவ்வளவு பேசறோமே, இந்த துர்காவும், சித்ராவும் வாயைத் தொறக்குதான்னு பாரேன்!'' என சுவாதி சொன்னதும், ரீசார்ஜ் செய்த பேட்டரி போல் தெம்பானார் துர்கா. ''படிப்பு... படிப்புன்னு இருக்குறதால (எல்லாரும் 'ஓ'வென்று கூச்சலிடுகின்றனர்.) யார் கூடவும் சண்டை போடவே முடியலை. அதனால, தம்பி, தங்கச்சி, தாத்தா, பாட்டி இவங்க கூட எல்லாம் சண்டை போடறதுக்கு, எக்ஸ்ட்ரா சன்டே யைப் பயன்படுத் திக்க வேண்டியது தான்'' என்றார்.

சித்ராவின் திட்டம் வேறு மாதிரியாக இருந்தது... ''அஞ்சு நாளு அம்மா சமைச்சு நாம சாப்பிடறோம். ரெண்டு சன்டேயில நாம சமைச்சு அவங்க சாப்பிடட்டுமே'' என்றதும், ''ஏன்டி! நமக்கு வராததைப் பத்தி எல்லாம் எதுக்குப் பேசிக்கிட்டு...?'' என்று ஒதுங்கினார் கலைவாணி.

''ரெண்டு சன்டேன்னா சன் டி.வியில ரெண்டு தடவை ராமாயணம்'' பார்ப்பேன் என்று ஆன்மிக அம்மணியாக மாறிப் பேசினார் மஞ்சு.

''நாட்டுக்கு ரொம்ப அவசியமான இந்த டிஸ்கஷனைத் துவக்கி வைச்ச சுவாதி அவர்களே... நீங்கள் என்ன செய்வீர்கள்?'' இம்சை அரசி 23ம் புலிகேசி போல ஹேமா கேட்க, பதில் கம்பீர் பேட்டில் பட்ட பந்து போல பறந்து வந்தது. ''தூங்கு வேன்.... தூங்கு வேன்... தூங்கிக் கிட்டே இருப்பேன்'' என்று சுவாதி சொல்லி முடிப்பதற்குள், ''நாங்க உன்னை உதைப் போம்... உதைப்போம்... உதைக்கக்கிட்டே இருப்போம்'' என சுவாதியை சுனாமி சூழலில் சிக்க வைத்தனர் மற்றவர்கள்!

– எம்.திரவியமுருகன்







சித்ரா

படுதலம் சுகுமாரன்




# புள்ளிகள்... கோலங்கள்...

தர்மலிங்கம் சபதம் போட்ட மூன்றாம் நாள் நள்ளிரவில், பொன்ராஜ், அலுவலகத்தில் வைத்து கத்தியால் குத்தப்பட்டு, இறந்து போனார். செய்தி விஷம்போல வேகமாகப் பரவியது.

போலீஸ் சுறுசுறுப்படைந்து, பிரேதத்தைக் கைப்பற்றி, போஸ்ட் மார்ட்டத்துக்கு அனுப்பிய கையோடு, ஆரம்பகட்ட விசாரணையில் வேகமாக இறங்கியது.

கமிஷனர் தலைமையில் அவசரக் கூட்டம்.

ஏ.ஸி., டி.ஸி., உளவுப் பிரிவு, ஏரியா இன்ஸ்பெக்டர் உட்பட பலர் ஆஜர்.

''இறந்து போனது சாதாரண ஆளில்லை. பிரபல தொழிலதிபர். குற்றவாளியை இருபத்து நாலு மணி நேரத்துல பிடிச்சாகணும். சி.எம்.கிட்டேயிருந்து உத்தரவு வந்திருக்கு. எந்த ஸ்டேஜ்ல இருக்கோம் நாம...''

''சார்...''

ஒரு அதிகாரி கமிஷனரின் கவனத்தைத் திருப்பினார்:

''கொலைக்கான காரணம், பழி உணர்ச்சி; பகை உணர்ச்சிதான். அவருக்கு வேண்டிய ஒருவர்தான் இந்தக் கொலையைப் பண்ணியிருக்கணும். சம்பவம் நடந்த போது ஆஃபீஸ்ல யாரும் இல்லை. கொலைகாரன், கட்டடத்தின் பின் வழியாய் வந்திருக்கணும். அல்லது ஏற்கெனவே ஆஃபீஸுக்குள் வந்து பதுங்கி இருக்கணும். சயனைட் தடவிய கத்தியால் குத்தியிருக்கிறதால, அலறக்கூட நேரமில்லாமல் பொன்ராஜ் இறந்திருக்கிறார். அதனால, கொலைகாரன் புரஃபஷனல் கில்லராத்தான் இருக்கணும்.''

''ஒரு தனிப்படை அமைப்போம். கொலை செய்தது தொழில் முறை கொலைகாரன்னா, அவனை, கூலி கொடுத்து ஏற்பாடு செய்தது யார்னு பார்க்கணும்...''

''சந்தேகப் பட்டியல்ல முதல்ல வர்றது... டைரக்டர் பூபதி. இவர், பொன்ராஜ் மகள் சுலேகாவைக் காதலிச்சிருக்கார். இந்த விஷயம் தெரிய வந்து, பொன்ராஜ் பூபதியைக் கடுமையாய்க் கண்டிச்சிருக்கார்.''

''நெக்ஸ்ட்...?''

''பூபதி, பொன்ராஜ் மகள் சுலேகா- இருவரையும் ஜோடியாகப் படம் எடுத்து, அதைக் கொண்டு, சுலேகாவைப் பெண் பார்க்க வருகிறவர்களையெல்லாம் வர விடாதபடி சதி செய்த... பொன்ராஜின் இரண்டாவது தம்பி குணசேகரின் மனைவி கோகிலா. பொன்ராஜின் குடும்பத்தை உடைக்கவென்றே மருமகளாய் வந்த பெண் இவள்...''

(தொடரும்)

ஒரு பக்கத் தொடர்



● **என்.காளிதாஸ், சிதம்பரம்**

**தாங்கள் கூட்டுக் குடும்பமாக வாழும் ரகசியம் என்ன...?**

எங்களுக்குள் எந்த ரகசியமும் கிடையாது...!

● **வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு**

**மீசையில்லாத கிரேஸி நடிப்பு எப்படி இருக்கும்...?**

எனது லேட்டஸ்ட் நாடகமான, 'சாக்லேட் கிருஷ்ணா'வில் எனக்கு கிருஷ்ணர் வேஷம். காலெண்டர், சினிமா, டிராமா இவற்றிலெல்லாம் கிருஷ்ணர் மீசை இல்லாமல்தான் சித்தரிக்கப்பட்டிருக்கிறார். மீசையை எடுத்துவிட்டுக் கண்ணாடியில் பார்த்தபோது கம்சன் போல இருந்தேன். பிறகு தோன்றியது, கடவுள் எப்படி இருப்பார் என்பதை, ஏன் காலெண்டர், சினிமா, டிராமாவில் போய்ப் பார்க்க வேண்டும்...? கோயிலில் போய்ப் பார்த்து விடுவோம் என்று, திருவல்லிக்கேணி பார்த்தசாரதி பெருமாளைப் போய்ப் பார்த்தேன். அவர் பாரதியார் போல நல்ல கம்பீரமாக முறுக்கு மீசை வைத்துக்கொண்டு, எனது மீசை ஆசையை ஆசீர்வதித்தார்.

● **என்.ஷண்முகம், திருவண்ணாமலை**

**ப்ளஸ் டூ தேர்வில் வழக்கம்போல மாணவர்களைவிட மாணவிகள் அதிக தேர்ச்சி பெற்றிருப்பது குறித்து...?**

பெண்கள் அதிக மதிப்'பெண்கள்' பெற்று, தங்களது அக்'மார்க்' முத்திரையைப் பதித்திருக்கிறார்கள்...!

மீசை போலதான் ஆசையும் வளர வளர வெட்டிடணும்!

● **ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி**

**கிரேஸி, தங்களுக்கு ஒட்டுக் கேட்கும் பழக்கம் உண்டா...?**

ஒளிந்துகொண்டு அரைகுறையாக ஒட்டுக் கேட்பதைவிட, நேருக்கு நேர் ஒட்டு மொத்தமாகக் கேட்டுவிடுவது உத்தமம்.



# மீசைக்கு ஓர் ஆசீர்வாதம்!

● சீதாலக்ஷ்மி, அடையார்

***பெண்களை ஏன் பொட்டை என்று சொல்கிறார்கள்...?***

நெற்றியில் மங்களகரமாகக் குங்குமப் 'பொட்டை' அணிவதால்!

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

***கிரேஸி நீங்கள் கடவுளிடம் வேண்டிக் கொள்ளும்போது என்ன சுலோகம் முணு முணுப்பீர்கள்...?***

Lazy என்று சொல்லும் அளவுக்கு, இந்த Crazy சுபாவமாகவே சற்று slowகம். எனவே, நான் உரக்க முணுமுணுத்து வேண்டிக் கொள்வது 'வேகம்.'

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

***மரணத்தின் தேதி முன்கூட்டியே தெரிந்து விட்டால்...?***

நாலு பேரை நம்பாமல், நாமே பொடி நடையாகக் காட்டுக்கு நடந்து போய்விடலாம்!

● ஆர்.ஆர்.தமன், சென்னை

***ஆதாம் - ஏவாளுக்கிடையே நிகழ்ந்திருக்க முடியாத சம்பாஷணையைக் கூற முடியுமா...?***

***ஏவாள்:*** *(முகவாய்க்கட்டையைத் தோளில் இடித்து)* உங்களைக் கட்டிக்கிட்டு நான் என்ன சுகத்தைக் கண்டேன்? எப்பப் பாரு இந்த அழுகின ஆப்பிளைக் கொடுத்து, நன்னா என்னை ஏமாத்தறேள். என் தலையெழுத்து, கோபிச்சுண்டு போறதுக்கு எனக்குப் பொறந்த வீடும் கிடையாது...!

***ஆதாம்:*** *(விரக்தியாக)* சேச்சே... பொழுது விடிஞ்சு பொழுதுபோனா, உன்னோட இந்த டயலாக்கைக் கேட்டுக் கேட்டுப் புளிச்சுப் போச்சுடி. ஏண்டா ஆப்பிள் மரத்தடிக்கு வர்றோம்னு இருக்கு. இதெல்லாம் பாக்கறச்சே பேசாம... 'ஆஃபீஸே' கதின்னு அங்கயே பழியா கிடந்துடலாம் போலிருக்கு.

***பி.கு:*** ஆதாம் அவனையுமறியாமல் உச்சரித்த 'ஆஃபீஸ்' என்ற இந்த வார்த்தை, நாளடைவில் பிரபலமாகி, வீட்டில் பிடுங்கல் காரணமாக, நிம்மதியாகத் தூங்க முடியாத மனிதன், அன்று முதல் வெளியில் 'ஆஃபீஸ்' என்ற பெயரில் ஒரு ரம்மியமான இடத்தைத் தோற்றுவித்து, பகல் நேரங்களில் சௌக்கியமாகத் தூங்க ஆரம்பித்தான்.

●ஸ்ரீதேவி, பெங்களூர்

***உங்களுக்குப் பிடித்த விளையாட்டு...?***

விளையாகாத விழியுறக்க விளையாட்டு...! அதாங்க துக்கம் இல்லாத தூக்கம். ஆனா ஒண்ணு... அந்தத் தூக்கம் கலையவில்லை என்றால் துக்கம்...!

கிரேஸியைக் கேளுங்கள்



# கல்கி




2008 ஜூன் 8
ஸர்வதாரி வைகாசி 26
மலர் : 66
இதழ் : 45


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## பரிசல் ஓட்டி வோட்டு பெருக்கிய யெதியூரப்பா!

"ஒகேனக்கல் பிரச்னையை, யெதியூரப்பா இனி கைவிட்டு விடக் கூடும்" என்று நம்பிக்கை தெரிவித்திருக்கிறார் தமிழக பொதுப்பணித்துறை அமைச்சர் துரைமுருகன்! அவருடைய நம்பிக்கை வீணாகாமல் இருக்க வேண்டும் என்பதுதான் நமது ஆவலும். ஆனால், கர்நாடக மாநிலத் தேர்தலில் பா.ஜ.க. 110 தொகுதிகளை வென்றதற்கு, பிராந்திய உணர்வு அரசியல் பெரிதும் உதவியுள்ளது என்று சொல்வதில் தவறிராது. ஒகேனக்கலில் பரிசல் ஓட்டியே யெதியூரப்பா வோட்டு பெருக்கியிருக்கிறார்!

கடந்த தேர்தலைக் காட்டிலும் 31 இடங்கள் கூடுதலாகப் பெற்றுள்ளது பா.ஜ.க. காங்கிரஸ், சென்ற தேர்தலைக் காட்டிலும் 15 தொகுதிகள் கூடுதலாக ஜெயித்துள்ளது. இருப்பினும், இது பா.ஜ.க. பெற்றுள்ளதைக் காட்டிலும் முப்பது தொகுதிகள் குறைவு! ஆனால், காங்கிரஸ் இத்தேர்தலில் பெற்றுள்ள மொத்த வாக்குகளின் எண்ணிக்கையோ, பா.ஜ.க. பெற்றுள்ளதைக் காட்டிலும் அதிகம்!

கடந்த தேர்தலில் 58 இடங்களைப் பெற்ற ஜனதா தளம் (எஸ்) இம்முறை 28 தொகுதிகளையே வென்றுள்ளது. முப்பது இடங்களுடன் வாக்குகளின் எண்ணிக்கையையும் கணிசமாக




இழந்துள்ளது. சென்ற ஆட்சிக் காலத்தில் பா.ஜ.க.வுடனான ஒப்பந்தத்தைப் பகிரங்கமாக மீறியதற்காக, அக்கட்சியை கர்நாடக மக்கள் திட்டவட்டமாகத் தண்டித்துள்ளனர் என்பது தெளிவு. மலிவான ஏமாற்று அரசியலுக்கு விழுந்த அடி அது!

காங்கிரஸின் இழப்புகளுக்குத் தாம் தார்மிகப் பொறுப்பேற்பதாக, அவசரஅவசரமாக அறிவித்துள்ளார் எஸ்.எம்.கிருஷ்ணா! அவரை ஆளுநர் பதவியிலிருந்து விலகச் செய்து, தேர்தல் பணிக்கு அனுப்பிய காங்கிரஸ் தலைவி சோனியாதான், உண்மையில் அத தோல்விக்குப் பொறுப்பேற்க வேண்டும்! உட்கட்சி ஜனநாயகத்தைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டு, கட்சியின் கட்டுக்கோப்பை இழந்து, காங்கிரஸ் பிளவுபட்டு பலவீனப்பட்டிருக்கிறது. வரிசையாகப் பல மாநிலங்களில் தோல்வியைச் சந்தித்து வருகிறது. தற்போது கர்நாடகாவில் பா.ஜ.க.வின் வெற்றி, அக்கட்சிக்கு அச்சத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

மதிப்புக்குரிய வெற்றி பெற்ற போதிலும், பா.ஜ.க.வுக்கு ஆட்சி அமைக்கும் பலம் இல்லை; சுயேச்சைகள் ஐவரது துணையுடன்தான் யெதியூரப்பா ஆட்சி அமைக்கிறார்! இவர்களில் மூவர், காங்கிரஸிலிருந்து பிரிந்து வந்த போட்டி வேட்பாளர்கள்! ஓரிருவருக்கு அமைச்சர் பதவி தரப்பட்டாலும் வியப்பதற்கில்லை.

மொத்தத்தில், கர்நாடக மாநில தேர்தல் முடிவுகள் முரண்பாடுகள் நிரம்பியதாக உள்ளன! ஆட்சிப் பணியாவது முரண்பாடுகள் இன்றி அமைய வேண்டும். தேசிய கட்சியான பா.ஜ.க., குறுகிய மாநில நோக்கைக் கைவிட்டு, நியாயமாக நடந்துகொள்ள வேண்டும். இதனை வலியுறுத்தும் கடமை, தமிழக பா.ஜ.க.வுக்கும் அக்கட்சியின் தேசிய தலைமைக்கும் இருக்கிறது. ●

# ஜில் ஜில் அனுபவம்!

கவர் ஸ்டோரி செம இளமை + செழுமை. 'கல்கி'யின் 'ஒற்றை ரோஜா', மணம் வீசி மனம் மயக்கும் ரோஜா!

- எஸ். மீனா, ஸ்ரீரங்கம்

மாஜிக்கையும் ஹிப்னாடிஸத்தையும் ஒப்பிட்டு 'தராசு' கூறிய பதில், மாயாஜால மாய் மனத்தைக் கவர்ந்தது!

- வே.ந.கதிர்வேல், வேலூர் - 6

ரஜினி ரூட், இரு ஜாம்பவான்களின் சங்கமம். பெரிதும் ரசிக்கத்தக்கதாக இருந் தது. திடீரென முடிந்திருப்பது வருத் தமே!

- ஆர்.கே.லிங்கேசன், மேலகிருஷ்ணன்புதூர்

தொழிலில் வெற்றிக் கொடி நாட்டி பூரிப்பு அடைந்தாலும், குடும்பத்துக்குரிய அன்யோன்னியத்தை விட்டுவிடக்கூடாது என்ற எஸ்.பி.எம்மின் கருத்து, நெஞ்சைத் தொட்டது.

-ஆர்.பழனிக்குமார், மதுரை - 14

செழிப்பைத் தரும் செண்டு மல்லி, வருமானத்தை ஈட்ட உதவும் கலக்கல் செய்தி!

-ஏ.பி.எஸ்.ரவீந்திரன்,வள்ளியூர்

முதல்வரின் பிறந்தநாளை கட்சியினர் கொண்டாடும் கார்ட்டூன், தமிழகத்தின் தற்போ தைய நிலையைத் தோலுரித்துக் காட்டியது!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை

உணர்வுபூர்வமான 'உயிர்ப்பு' கவி தையைப் படைத்த பா.ராஜா அவர்களுக்கு வாழ்த்துகள்.

-ஜெ.மகேஷ்குமார், கோவில்பட்டி

'அலை உறங்கும் அலையாத்தி' கட்டுரை, முத்துப்பேட்டைக்குப் போய் வந்த 'ஜில்' அனுபவத்தைத் தந்தது!

- அ.முரளிதரன், மதுரை

## ஸ்பீட் போஸ்ட்

'கனவு காணுங்கள் கலெக்டராகலாம்'- காலத்துக்கேற்ற கட்டுரை. சத்தமில்லாமல் சமூக சேவை செய்து வரும் மனிதநேய அறக்கட்டளை நிர்வாகி சைதை துரைசாமி, எதிர்கால இளைஞர்களின் நம்பிக்கை நட் சத்திரம்!

- திருமதி. ஜி. லக்ஷ்மி வாசுதேவன், சென்னை

போலீஸாரே கள்ளச் சாராயம் டெண் டர் எடுக்கும் அவலம்கூட நிகழ்கிறது என்ற தலையங்கச் செய்தியைப் படித்தவுடன் திடுக்கிட்டுப் போனேன்!

- த.புகழேந்தி, சிவகிரி



- தமிழ் மொழியை செம்மொழியாக்குவதில் அரும்பாடுபட்டு வெற்றி கண்டவர்.
- நூலகங்களுக்கு ஆயிரம் பிரதிகள் வாங்கச் சொல்லி அரசாணை வழங்கியவர்.
- ரூபாய் ஒரு கோடியை தன்னுடைய சொந்த நிதியிலிருந்து வழங்கியவர் - அதிலிருந்து வரும் வட்டி தொகையிலிருந்து ரூபாய் ஒரு லட்சம் வீதம் ஐந்து தமிழ் எழுத்தாளர்களுக்கும் ஒரு பிறமொழி எழுத்தாளருக்கும் வருடந்தோறும் வழங்க ஏற்பாடு செய்தவர்.
- புத்தகத் துறையை சேர்ந்தவர்களுக்கென்று புத்தகப் பூங்கா அமைக்க இடம்.
- சிறந்த தமிழ் நூலைப் பதிப்பித்த பதிப்பாளர்களுக்கான பரிசுத் தொகையை ரூபாய் 2000த்திலிருந்து ரூபாய் 5000 என்றும்.
- சிறந்த தமிழ் எழுத்தாளர்களுக்கான பரிசுத் தொகையை ரூபாய் 10,000த்திலிருந்து ரூபாய் 20,000 என்றும் வழங்கியவர்.
- உலகத்திலேயே முதன் முறையாக பதிப்புத்துறை சார்ந்தவர்கள் நலம் பேண பதிப்பாளர் நல வாரியம் அமைத்தவர்.
- ரூ.100/- கோடி செலவில் உலகத்தரம் வாய்ந்த நூலகம் அமைத்திட வழி வகுத்தவர்.



**முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர்** அவர்களின்
**பிறந்த தினமான ஜூன் 3ஆம் தேதியை**

# உலகத் தமிழ்ப் புத்தகத் திருநாள்

என அறிவித்து கொண்டாடி மகிழ்கிறோம்.

பதிவு எண் : 168/2008

# தமிழ்நாடு தமிழ்ப்பதிப்பாளர் சங்கம்

23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை-600017. தொலைபேசி : 24332682




விஜய்க்கு, அவனோட தங்கை வித்யா இறந்து போனது ரொம்ப பாதிப்பை உண்டாக்கிடுச்சுன்னு ஏற்கெனவே சொன்னேன் இல்லியா? அது அவனோட மனசை மட்டும் இல்லாம உடம்பையும் பாதிச்சுடுச்சு. அடிக்கடி வயித்து வலி வரும்; அது தலைவலியில போய் முடியும். துடிச்சுப் போயிடுவான்.

அப்போ டைரக்டர் ஷங்கர், என் கணவரோட படங்கள்ல ஒர்க் பண்ணிக்கிட்டு இருந்தார். விஜயா ஹாஸ்பிடல்ல ஒரு டெஸ்டுக்கு எழுதிக் குடுத்து, ஊசி போடறதுக்காக, விஜய்யைக் கூட்டிட்டுப் போயிருந்தாங்க. ஷங்கரும் கூடப் போயிருந்தார். ரெண்டு நிமிஷம்தான். எப்படி வந்தான்னு தெரியல. வீட்டுக்கு ஓடி வந்துட்டான். அதுக்கு அப்புறம் அவனோட அப்பாதான் அவனைத் திட்டி, அடிச்சு இழுத்துக்கிட்டுப் போயி ஊசி போட்டுக் கூட்டிட்டு வந்தார். அவ்வளவு முரண்டு பண்ணுவான். இப்பக்கூட ஷங்கர் என்னைப் பார்த்தா, அதை நினைவு வைச்சுக்கிட்டுச் சொல்வார்.

விஜய்யை ஸ்கூல்ல சேர்க்கறப்போ அவனுக்கு என்ன பேர் வைக்கறதுங்கற பிரச்னை வந்தது. ஏன்னா, என் கணவர் கிறிஸ்டியன். நான் இந்து. ரெண்டு பேரும் மனசுக்குப் பிடிச்சுப் போயி கல்யாணம் பண்ணிக்கிட்டோம். ஸ்கூல்ல விஜய் 'கிறிஸ்டியன்'னு சர்டிஃபிகேட்ல எழுதியிருந்தோம். இப்போ என்ன பண்றது? கடைசியில அவனுக்கு 'ஜோசப் விஜய்'னு பேரு வைச்சோம். விஜய்யை ஒரு பிரபலமான கான்வென்ட்ல படிக்க வைக்கலையேன்னு எனக்கு ஒரு குறை இருக்கு. ஏன்னா நானும் என் கணவரும் கான்வென்ட்ல படிக்கலை. நாங்க மிடில் கிளாஸ் ஃபேமிலிங்கறதால, விஜய்யை எங்களால பெரிய ஸ்கூல்ல படிக்க வைக்க முடியலை. கொஞ்சம் வசதி வந்தப்புறம்கூட, என் கணவர் அவன் சாதாரண ஸ்கூல்லயே படிக்கட்டும்னு விட்டுட்டார்.

சென்னை, சாலிகிராமத்துல இருக்கற 'பால லோக் மெட்ரிகுலேஷன் ஸ்கூல்'ல ப்ளஸ் டூ வரைக்கும் விஜய் படிச்சான். என் வீட்டுக்காரரோட உறவினர்கள்ல நிறைய பேர் இன்ஜினியருக்குப் படிச்சுருந்தாங்க. வெளிநாட்டுல வேலை பார்த்துக்கிட்டு இருந்தாங்க. நாங்களும் விஜய்யை அந்த மாதிரி இன்ஜினியரிங்





ஷோபா சந்திரசேகர்

இல்லைன்னா மெடிகல் படிக்க வைக்கணும்னு நினைச்சோம். ஆனா அது நடக்கலை. விஜய் சென்னை லயோலா காலேஜ்ல, விஷுவல் கம்யூனிகேஷன்ல சேர்ந்தான். இதுக்கிடையில விஜய் தன்னை நல்லா வளர்த்துக்க ஆரம்பிச்சான்.

கண்ணாடி முன்னாடி நின்னுக்கிட்டு வசனம் பேசுவான்,

# “அப்பா நான் ஹீரோவா நடிக்கணும்!”

நடிப்பான். குழந்தை நட்சத்திரமா நடிக்க நான்ல... அதான் இவ்வளவு ஆர்வமா இருக்கான்னு நாங்களும் விட்டுடுவோம். விஜய், நல்லா டான்ஸ் ஆடுவான். இப்பதான் எல்லாப் படத்துலயும் கதாநாயகிகளே டான்ஸ்

ஆடறாங்க. அப்போல்லாம், அனுராதா, ஜெயமாலினின்னு டான்ஸ் ஆடுறதுக் குன்னே நடிகைகள் இருப்பாங்க. வீட்ல பர்த் டே, ஏதாவது விசேஷம்னா, அவங்க ஆடின ஏதாவது ஒரு பாட்டை டேப்புல போட்டுட்டு ஆடுவான். இப்படி அவன் ஆடறதை ஏவி.எம். ஸ்டுடியோவுல ஒரு முழுப் பாட்டையே ஷூட் பண்ணியிருக் கோம்.

அவனுக்கு இசையிலயும் ஆர்வம் இருந்துச்சு. திவாகர் மாஸ்டர்கிட்ட கிதார் கத்துக்கிட்டான். முறைப்படி கர்நாடக சங்கீதம் எதுவும் கத்துக்கலையே தவிர, சுருதியோட அவனுக்குப் பாடத் தெரியும். ஆனாலும் அவன் ஒரு தனி ரகம்தான். அதைச் சொல்லியே ஆகணும். நானும் அவனும் சேர்ந்து முதல் முதல்ல சினிமாவுக்காகப் பாடின பாட்டு, 'தொட்ட பெட்டா ரோட்டு மேல...' அந்தப் பாட்டை ரெகார்டிங் பண்ணி னப்போ, நாங்க ரெண்டு பேரும் சேர்ந்து பாடலை. எனக்கு முன்னாடி போய் அவன் ஒரு டிராக்குல பாடிட்டு



வந்துட்டான். வெளியே வந்து, 'அம்மா! அப்பா கூப்பிடறாரும்மா'ன்னான். அப் புறம் நான் போய்ப் பாடிட்டு வந்தேன். அவனுக்கு ரெகார்டிங்ல பாடும்போது யாரும் கூட இருக்கக்கூடாது. மியூசிக் கண்டக்ட் பண்றவங்க மட்டும்தான் ஸ்டுடியோவுல இருக்கணும். அவனே 1, 2, 3, 4... சொல்லிப் பாட ஆரம்பிச்சுடுவான்.

விஜய் அடிக்கடி போற சினிமா தியேட் டர் 'உதயம்'. நல்ல படமா இருந்தா திரும்பத் திரும்பப் பார்ப்பான். 'தளபதி', 'நாயகன்' மாதிரியான படங்களை ஏழு,

## என்ன பரிசு?

- **சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...**
- **குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...**

எட்டு தடவை பார்த்திருக்கறதா அவனே சொல்லியிருக்கான். எல்லாம் ஸ்கூல், காலேஜ் 'கட்' அடிச்சுட்டுதான்!

அவனுக்குச் சின்ன வயசுலருந்தே சினிமாவுல நடிக்கணும்கற ஆசை உள்ளே கனன்றுக்கிட்டு இருந்திருக்கும்போல. எங்களுக்குத்தான் அது தெரியலை. லயோ லாவுல விஷுவல் கம்யூனிகேஷன் சேர்ந் தானே தவிர, ஒழுங்கா காலேஜுக்கே அவன் போகலை. ஒருநாள் அவங்க அப்பா முன்னாடி வந்து நின்னான்.

''நான் ஹீரோவா நடிக்கணும்னு ஆசைப் படறேன். நீங்களே என்னை சினிமாவுல அறிமுகப்படுத்துறீங்களா? இல்ல, வெளி

## தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்

கட் & கீப்

## விஜய் வின்னர்ஸ்-4

யில போய் நான் சான்ஸ் கேக்கட்டுமா?'' அப்படின்னான். என் கணவர் ரொம்ப அதிர்ச்சி அடைஞ்சுட்டார்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : பாலு சத்யா

*ஹலோ வாசகர்களே!*

ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. இரண்டாவது, மூன்றாவது வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!

- விஜய் வின்னர்ஸ் -2 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் - 22ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்ச கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 21-ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜென்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம். ஸோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!



# விஜய் வின்னர்ஸ் -2

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. பாக்யராஜ், சென்னை - 21
2. எம்.அக்ஷயா, சென்னை - 17
3. ஆர்.கல்யாணராமன், சென்னை - 91
4. சாயிசுதா, ஈரோடு - 638 001
5. மைதிலி ராகவன், கடலூர் - 607 002
6. எஸ்.கண்ணன், நெய்வேலி - 607 807
7. எஸ்.புவனா, கரூர்
8. கா.சங்கர், விழுப்புரம் - 605 103
9. கே.ஜகந்நாதன், சேலம் - 1
10. பி. ஸ்ரீநிவாசன், சென்னை - 45

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.
* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 12.06.2008

1. நாளைய தீர்ப்பு படத்தில் விஜய்யின் அப்பா?
   ☐ ராதா ரவி ☐ நாசர்
2. பூஜாவா... பூஜாவா... பாடல் இடம் பெற்ற படம்?
   ☐ ப்ரியமுடன்
   ☐ ஆசையில் ஒரு கடிதம்
3. கண்ணுக்குள் நிலவு படத்தில் விஜய்யின் ஜோடி?
   ☐ ஷாலினி ☐ சங்கவி
4. விஜய் போலீஸாக நடித்த படம்?
   ☐ கில்லி ☐ போக்கிரி
5. விஜய்யின் இயற்பெயர்?
   ☐ ஜோசப் விஜய் ☐ ஜான் விஜய்

பெயர் : .................................................... வயது : ............

முகவரி : ....................................................................

....................................................................

செல் : ............................ இ.மெயில் : ..................................

*போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :*

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 5,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

பொதுவாகவே பெண்கள் பிஸி. அதிலும் கரியர் வுமன் என்றால் கேட்கவே வேண்டாம். பிஸியோ பிஸி! அவளுக்கென்று ப்ரத்யேகமான நேரம் கிடைப்பதே அரிது. வீட்டில் எப்படி இருந்தாலும், பணிக்குச் செல்லும்போது பளிச் எனத் தனித்துத் தெரியவே விரும்புவார்கள். ஆனால், என்ன செய்தாலும் முகம் டல்லடிக்கிறதே, ஃப்ரஷ்ஷாக இல்லையே, எனக் கவலைப்படும் பெண்ணா நீங்கள்...

போவது உறுதி! ப்யூட்டி என்றால் வெறும் முக அழகுக் குறிப்பு அல்ல. ஹெல்த்தியான உடல் - மன ஆரோக்கிய குறிப்பு.

இந்த விடுமுறை நாளில் எத்தனை சோம்பேறியாக இருக்க முடியுமோ... இருங்கள். கூடியவரை பெட்டில் இருக்கவும்.

சரி... இனி சன்டே டயட்டை பார்ப்போமா...?

**ப்ரேக் ஃபாஸ்ட்**

★ ஒரு க்ளாஸ் ஆரஞ்சு ஜூஸ் கார்ன்ஃப்ளேக்ஸ் பாலுடன் ★ டீ அல்லது காஃபி

**பகல் 11 - 12 மணியளவில்**

★ ஸ்கிம்டு மில்க் ஒரு கப், கூடவே 1 பிஸ்கட்.

**மதிய உணவு**

★ காய்கறிகளினால் ஆன பச்சை சாலட் ஒரு கிண்ணம் ★ கீரை ஒரு கப் ★ பழங்கள் ஒரு கப் ★ நான்வெஜ் பிரியர் என்றால் சிறிது சிக்கன் அல்லது மீன்.

**மாலை**

டீ, காஃபி, பால் அல்லது ஜூஸ் ஒரு கப் + 1 பிஸ்கட்

**டின்னர்**

★ சூப் ஒரு கிண்ணம் ★ பிரெட் - 2 ஸ்லைஸ் ★ பழங்கள்



# ஃப்ரீயா ஒரு

டோன்ட் வொர்ரி... சொல்லப் போகும் ஈஸி யோசனைகளைப் பின்பற்றுங்கள்.

வாரத்தில் ஒருநாள் தனக்கே தனக்கு என ஒதுக்கவும். ப்ளீஸ்... ஞாயிறு மற்றவர்களுக்கு விடுமுறை. உங்களுக்கும் ரெஸ்ட், ரிலாக்ஸ் கொடுக்கும் நாள். கூடவே, அன்று தன்னை மேன்மேலும் அழகுபடுத்திக் கொள்ளப் போகும் நாள் என காலண்டரில் குறிக்கவும்.

இந்த ஒருநாள் ப்யூட்டி கேரினால், வாரம் முழுக்க எனர்ஜியுடன் செயல்படப்

**பெட் டைம்**

படுக்கைக்குச் செல்லும் முன் ஒரு கப் பாலில் தேன் கலந்து பருகவும். மறுநாள் காலையில் எழுந்தவுடனேயே லைட்டாக ஃபீல் பண்ணுவீர்கள்.

ஞாயிறு ப்ரேக் ஃபாஸ்ட் முடிந்த உடனேயே, முகத்திற்கு நல்ல ஒரு ஃபேஸ் மாஸ்க் போடவும். பிறகு ஒரு டப்பில் வெதுவெதுப்பான தண்ணீரில், சிறிது ஷாம்பூ போட்டு கால்களை வைக்கவும். ப்யூமிஸ் ஸ்டோன் அல்லது ஸ்க்ரப் கொண்டு, நன்றாக கால்களை ப்ரஷ் செய்

யவும். 15 நிமிடங்கள் கழித்து கால்களை நன்றாக டவலால் ஒற்றி எடுத்து, க்ரீம் அல்லது மாய்ஸ்சரைஸர் தடவவும். கை நகங்களை நன்றாக ஷேப்பில் வெட்டி, பழைய நெய்ல் பாலீஷை ரிமூவர் கொண்டு துடைக்கவும். முகத்தைக் கழுவவும். புருவங்கள் சீராக இருக்கிறதா எனப் பார்த்து ட்வீஸரால் சீர் செய்யவும். தேவைப் பட்டால், கை கால்களுக்கு வாக்ஸிங் செய்துகொள்ளவும். பிறகு... ரெஸ்ட்! மதிய உணவுக்கு முன்னால் ரிலாக்ஸ்டாக ஒரு குளியல் போடவும். வெதுவெதுப்பான நீரில், சில துளிகள் உங்களுடைய ஃபேவரிட் பாத் எஸென்ஸை விட்டுக் குளிக்கவும். நிம்மதியாகக் குளித்தல் முக்கியம்!

குளித்த பிறகு மிக ஃப்ரெஷ்ஷாக இருப்பீர்கள். லஞ்ச்சை முடித்து விட்டு, திரும்பவும் ரிலாக்ஸ்! பேசக் கூடாது. வேலை செய்யக் கூடாது. கம்ப்யூட்டர், டீ.வி. அறவே பார்க்கக் கூடாது.







சருமத்தைப் பொறுத்தவரை க்ளென்ஸிங் லோஷன் கொண்டு முகம் கைகளை காலை மாலை இரு வேளையுமே துடைக்க வேண்டும்.

வேலைக்குப் போய் வீடு திரும்பிய பிறகு எவ்வளவுதான் களைத் திருந்தாலும், மேக்-அப்பைத் துடைக்காமல் படுக்கப் போகாதீர்கள். ஒவ்வொரு இரவுமே நரிஷ்மென்ட் க்ரீம் உப யோகிக்கவும்.

பவுடர் சிறிது, சாஃப்ட் ஷேட் லிப்ஸ் டிக், ரூஜினால் ஒரு டச்... இதுவே உங்களுடைய ஆஃபிஸ் மேக் - அப். ஹேண்ட் பேகிலும் சிறிய மேக்-அப் கிட் கண்டிப்பாக இருக்க வேண்டும். ஆஃபிஸிலிருந்து வீடு கிளம்பும்போது

# ஜாலிடே!

டச் - அப் செய்தே கிளம்ப வேண்டும்.

ஃப்ரெஷ்ஷாக இருப் பதற்கு, ஒருநாள் விடு முறை உடலுக்கும் மனத்துக்கும் தேவை. ஸோ, நோ டீவி, நோ கம்ப்யூட்டர், நோ அரட்டை, நோ வொர்க். ஒன்லி ரெஸ்ட்!

– லதா சேகர்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**தஞ்சை பரத்வாஜ்**

**மேஷம்:** துணிச்சலோடு செயல்படும் மேஷ ராசிக்காரர்களே... குடும்பச் சொத்துல இருந்து வந்த பிரச்னைங்க முடிவுக்கு வரும். சுபச்செலவுகள் உண்டுங்க. கடன் தொல்லைங்க முடிவுக்கு வருமுங்க. வியாபாரம் நல்ல படியா போகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.



**ரிஷபம்:** பேச்சுவன்மை மிக்க ரிஷபராசிக்காரர்களே... உத்தியோக இட மாற்றம் உண்டுங்க. குடும்பத்துல பிரச்னைகள் இருக்காது. கல்வியில் நல்ல முன்னேற்றம் காணலாம். வேலைப்பளு அதிகமாகும். திருமண பாக்கியம் உண்டாகப் போகுது. நண்பர்கள் தேடி வந்து உதவுவாங்க.



**மிதுனம்:** பழகுவதற்கு இனிமையான மிதுன ராசிக்காரர்களே... தடைப்பட்ட காரியங்கள் மளமளன்னு நடக்கப்போவுது. குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. கடன் தொல்லைங்க இருக்காது. பணம் பல வகையில வருமுங்க. ஆஞ்சநேயர் வழிபாடு நன்மையை அதிகப்படுத்துமுங்க.









**கடகம்:** கண்டிப்பும் பாசமும் சரிவிகித கலவையான கடக ராசிக்காரர்களே...உத்தியோகத்துல நல்ல பெயர் வாங்குவீங்க. கடன் பாக்கிகள் வசூலாகும். நண்பர்கள் உதவி செய்வாங்க. சாப்பாட்டு விஷயத்துல கவனமா இருங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**சிம்மம்:** தளராத மனமுதிர்ச்சி கொண்ட சிம்ம ராசிக்காரர்களே... மனத்தில் இருந்த குழப்பங்கள் தீருமுங்க. ஆரோக்கியம் நல்லபடியாக இருக்கும். பிரிந்த குடும்பம் ஒண்ணு சேரும். தொழில்ல நல்ல ஏற்றம் இருக்குமுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

**கன்னி:** கண்ணியமிக்க கன்னிராசிக்காரர்களே... இது ரொம்ப அருமையான வாரமுங்க. நீங்க தொட்டால் மண்கூடப் பொன்னாகுமுங்க. வியாபாரத்துல நல்ல முன்னேற்றம் இருக்குமுங்க! கல்வியில மேன்மை அடைவீங்க. சனீஸ்வர வழிபாடு நன்மையளிக்குமுங்க.

**துலாம்:** விவேகம் நிறைந்த துலா ராசிக்காரர்களே... வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேருமுங்க. பூர்வீக சொத்து பிரச்னை தீர்ந்து போகும். தொழில் செய்ய உதவிங்க கிடைக்குமுங்க. அடிக்கடி மன உளைச்சல் ஏற்பட்டாலும் நன்மைக்குக் குறைவு இருக்காதுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நல்ல பலன்களை அளிக்குமுங்க.

**விருச்சிகம்:** நகைச்சுவையுடன்
















**01.06.2008 முதல்**
**07.06.2008 வரை**

பேசும் விருச்சிக ராசிக்காரர்களே... அதிக மதிப்பெண்கள் பெறுவீங்க. வருவாய் பெருகுமுங்க. புதிய வேலைவாய்ப்புங்க தேடி வரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். புதிய தொழில் தொடங்கப் போறீங்க. நாணயமாக நடந்துக்குவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மை யளிக்குமுங்க.

**தனுசு:** புண்ணியப் பயணம் மேற் கொள்வதில் மிகுந்த ஆர்வம்கொண்ட தனுசு ராசிக்காரர்களே... வாழ்க்கை இனி மையாக இருக்கும். வசதிவாய்ப்புகள் பெருகப்போவுது. வேலையில் சுமை இருக்காது. வியாபாரம் சூடுபிடிக்கும். குரு / சனி வழிபாடு நன்மையை அதி கப்படுத்தும்.

**மகரம்:** தெய்வ நம்பிக்கையோடு காரியங்களில் ஈடுபடும் மகர ராசிக்காரர் களே... சுபகாரியங்கள் தடையில்லாம நடைபெறப் போகுது. வாக்கு மேன் மையை அடையும். வேலையும் கொஞ்சம் அதிகரிக்குமுங்க. கைப் பொருள் மீது கவனமா இருங்க. ராகு / கேது வழி பாடு நன்மையளிக்குமுங்க.

**கும்பம்:** விரைந்து முடி வெடுக்கும் கும்பராசிக் காரர்களே... வேலையில சுமை அதிகமாகும். குடும்ப வாழ்க்கையில விட்டுக் கொடுத்துப் போவது நல் லது. மறைமுக எதிர்ப்பு களும் இருக்கும். உடல் ஆரோக்கியம் நல்ல நிலை யில் இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மை தரும்.

**மீனம்:** எதிரிகளையும் நண்பர்களாக் கும் மீனராசிக்காரர்களே... இந்த வாரம் சிறப்பாக அமையுமுங்க. வியாபாரம் ஜோரா இருக்கும். குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. ஆடை ஆபரணங்கள் வாங்கிக் குவிப்பீங்க. வெளிநாடு போற வாய்ப்பு வரும்ங்க. ஆஞ்சநேயர் வழி பாடு நன்மையைத் தருமுங்க.

# கால் கிலோ காதல் அரை கிலோ கனவு

## ஜிலு ஜிலு தொடர்கதை - 8

இது ஒரு தருணம். மகிழ்ச்சியும் கலவரமும் ஒருங்கே உருவாகும் தருணம். இதைச் சந்திக்க, பைபாஸ் முத்து மாரியம்மனோ குருட்டு அதிர்ஷ்டமோ அவசியம் கைகொடுக்கும். பத்மநாபன் திடசித்தம் கொண்டான். வீரபத்திரன், அச்சமூட்டக்கூடிய ஆகிருதியில் இருந்தால்தான் என்ன? அவன் ஒரு ஸ்லேவ்தான். கண்டிப்பாக அவனால் வளர்மதியைக் காதலிக்க முடியாது. வத்தக் காச்சி போலிருக்கும் பத்மநாபனால் முடியும். அப்பாவுக்கும் ஹெட்மாஸ்டருக்கும் அகில உலகுக்குமே விஷயம் தெரிந்தாலும், 'ஆமாம், காதலிக்கிறேன்' என்று அடித்துச் சொல்ல அவனால் முடியும்.

உப்புகொடோனுக்கு அருகே, தான் வரச்சொன்ன இடத்துக்கு வீரபத்திரனுடன் வந்து சேர்ந்ததுமே மன்னிப்புக் கேட்கும் குரலில் வளர்மதி,

''தனியாத்தான் கௌம்பினேன். பாப்பா தனியா போவுதேன்னு தாத்தாதான் இவன அனுப்பி வெச்சாரு. வீரபத்திரா, நீ போய் நாலு புளியாங்கா எடுத்தாயேன். சாப்ட்டுக்கினே பேசலாம்'' என்று சொன்னாள்.

வீரபத்திரன் பத்மநாபனை முறைத்தான். அல்லது வெறுமனே அவன் பார்ப்பதே, தனக்கு முறைப்பதுபோல் தெரிந்தது.

இருப்பினும் அவனை வெறுப்பேற்றுவது என்று முடிவு செய்து, ''புளியாங்காயெல்லாம் வேணாம் வளரு. எனக்கு ஒரு பெரிய டவுட்டு. அத்த மொதல்ல க்ளியர் பண்ணு. பின்வத்தின் சுருங்கிய வடிவம்னா என்னா? மகாலிங்க வாத்தியாரு சொன்னப்ப சரியாவே விளங்கல. பன்னீராண்ட கேட்டேன். போடான்னுட்டான். ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்குற திமிரு. இத்தப் புரிஞ்சிக்காம இன்னிக்கு எப்பிடி ஓம்மொர்க்கு பண்றதுன்னே தெரியல.''

வளர்மதி சிரிப்பை அடக்கிக்கொண்டாள். ஒட்டைப் பாலத்தின் கைப்பிடிச் சுவரில் தக்கென்று ஏறி அமர்ந்து, பத்மநாபன் கையிலிருந்த நோட்புக்கை வாங்கிப் பிரித்தாள். அவன் பாக்கெட்டிலிருந்து அவளே பேனாவை எடுத்து, ''இங்க பாரு...'' என்று ஆரம்பித்தாள்.

''சிநேகிதக்காரப் பொண்ணுங்கல்லாம் வர்றாங்கன்னா? இங்க இவன் மட்டும்தான் இருக்கான்?'' என்று முதல் சந்தேகத்தை வீரபத்திரன் கேட்டான்.

பத்மநாபனுக்கு அதுவும் மகிழ்ச்சிக்குரிய தகவலாகவே இருந்தது. தன் பொருட்டு வீட்டில் ஒரு பொய் சொல்லியிருக்கிறாள். சந்தேகமே இல்லை. காதல்தான். ஆண்டவா, இந்தக் கடங்காரனை ஒழித்துக்கட்டேன்? ஒரே ஒரு நிமிஷம் நான் வளர்மதியிடம் தனியே பேசிவிட ஒரு வாய்ப்பை உருவாக்கிக் கொடேன். பெரியவனாகி, சம்பாதித்து ஒரு கோயிலைக் கட்டிவிடுகிறேனே.

வளர்மதி அவன் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. மிகத் தீவிரமாக நோட்புக்கில் எதையோ எழுதி, ''இங்க பாரு. எந்தப் பின்னத்தையும் அதோட சுருங்கின வடிவத்தால பாக்க முடியும். இப்ப, p, q,ன்னு ரெண்டு நம்பர் இருக்

குன்னு வெச்சிக்கோ. இந்த ரெண்டையும் 'னு ஒரு நம்பரால வகுக்க முடியும்னா, வகுத்து, வர்ற நம்பர்ஸ்தான் அதோட கருங்கின வடிவம்.''

''ஓஹோ'' என்றான் பத்மநாபன்.

''நாலு பை ஆறுன்னு ஒரு பின்னம் இருக்குன்னா அதோட கருங்கின வடிவம் எது?''

பத்மநாபன் யோசித்தான். காதலின் கருங்கின வடிவம் கனவு காண்பது; கனவின் கருங்கின வடிவம் கவிதை எழுதுவது; கவிதையின் கருங்கின வடிவம் அதை நினைத்துப் பார்ப்பது. நினைவின் கருங்கின வடிவம் வளர்மதி; வளர்மதியின் கருங்கின வடிவம் அவளது புன்னகை; புன்னகையின் கருங்கின வடிவம்...

பத்மநாபன் ரகசியமாக வீரபத்திரனைப் பார்த்தான். மவனே இரு. எனக்கும் வளருக்கும் திருமணம் ஆகட்டும். உன்னைத் திருமணச் சீராகக் கேட்டு வாங்கி வந்து, தினசரி ஆறு கேன் தண்ணீர் இழுக்க வைக்கிறேன்.

''என்னடா யோசிக்கற? நாலு, ஆறு

**பா.ராகவன்**



ரெண்டையும் ரெண்டால வகுக்க முடியும் இல்ல?''

''ஆமா?''

''அப்ப சொல்லு.''

''ரெண்டு பை மூணு.''

''கரெக்ட். அதான் நாலு பை ஆறோட சுருங்கின வடிவம்.''

வீரபத்திரன் கொட்டாவி விட்டான். ''இந்தா வர்றேன்' என்று இரண்டடி நகர, ''தம்மடிக்கப் போறியா வீரபத்திரா?'' என்று பத்மநாபன் கேட்டான்.

துடித்துப் போய் திரும்பிய வீரபத்திரன், ''டேய், கொன்னுடுவேன் உன்னிய. அதெல்லாம் இல்ல வளரு. நீ தாத்தா வாண்ட ஒண்ணும் சொல்லாத. நான் சொம்மா இப்பிடி...'' என்று கொடோன் சந்தைக் காட்டினான். வளர்மதி சிரித்தாள்.

முறைத்தபடி வீரபத்திரன் நகர்ந்ததும் பத்மநாபன், ''ஐ லவ் யூ வளரு. என்னால இதைச் சொல்லாம இருக்க முடியல. செத்துருவேன் வளரு'' என்றான்.

அவள் ஒன்றும் பேசவில்லை. அதிர்ச்சியடைந்த மாதிரியும் தெரிய வில்லை. இது பத்மநாபனுக்கு வியப்பாக இருந்தது. இப்படியுமா ஒரு பெண் இருப்பாள்?

''தபாருடா. நீ லவ் பண்றேன்னு எனக்குத் தெரியும். ஆனா, நான் இப்ப சொல்ல முடியாது. என்னால முடிஞ்சது உன்னை மாட்டிவிடாம இருக்கேன். உன்னை மாதிரியே இன்னும் ரெண்டு பேரு லவ் பண்றேன்னு சொல்லியிருக்காங்க. எனக்கு எவன் மேலயும் இஷ்டம் இல்ல. நான் மொதல்ல நல்லா படிக்கணும்'' என்றாள்.

பத்மநாபனுக்குச் சுறுசுறுவென்று ஆகி விட்டது. இன்னும் இரண்டு பேர்! கடவுளே. யார் அந்தத் திருட்டுப் பயல்கள்?

''அதெல்லாம் ஒனக்கு வேணாம். இப்ப நமக்கு வேல படிக்கறது. அத ஒழுங்கா செய்யு. லவ்வெல்லாம் சரிப்படாது குடுமி''

அவனுக்கு அழுகை வந்தது. ''என்னால முடியல வளரு. எங்கப்பா எப்பிடி அடிச்சாரு தெரியுமா? இன்னிக்கு ஹெட்மாஸ்டர் கூப்பிட்டு அப்பா எதிர்ல அசிங்கமா போயிடுச்சு.''

''ஐயோ எப்படா?''

''காலைல. உன்னாண்ட சொல்ல வேணாம்னுதான் நெனச்சேன். ஸ்கூலுக்கே தெரியும். என்னால மறைச்சு வெக்க முடியல வளரு. நீ இல்லாம என்னால வாழக்கூட முடியாது. நீ மட்டும் சரின்னு சொல்லிட்டன்னா, அப்புறம் நீ பேசக்கூட



வேணாம். சரின்னு சொல்லிட்டே, ஒரு வார்த்தை போதும். அத்தவெச்சிக் கிட்ட நான் டிகிரி வரைக்கும் ஒழுங்கா முடிச்சிடுவேன். வேல தேடிக்கிட்டு நேரா உன் வீட்டாண்ட வந்து நிப்பேன். அது வரைக்கும் உம்மூஞ்சியக்கூட ஏறெடுத்துப் பாக்கமாட்டேன்.''

அவள் அவனை உற்றுப் பார்த்து,

''நாளைக்கு ஒனக்கே இதெல்லாம் சில்றத்தனமா தெரியும் குடுமி. வேணாம். சொன்னாக் கேளு'' என்றாள்.

''முடியல வளரு.''

''தபாரு நான் நல்லவிதமா சொல்றேன். எங்க வீட்டுக்குத் தெரிஞ்சா ப்ராப்ளமா யிடும். எங்க தாத்தா ஒன்ன சும்மாவே விட மாட்டாரு. ஸ்கூல்லேருந்து தூக்கிருவாங்க அப்புறம்? தேவையா இதெல்லாம்?''

''நான் என்ன உன் தாத்தாவையா லவ் பண்றேன், ஒன்னத்தானே? நீ சொல்லு வளரு. என்னிய புடிக்கலியா?''

ஒரு கணம் யோசித்தாள். பிறகு ''அப் பிடிச் சொல்லமுடியாது. ஆனா, லவ் இல்ல.''

அவனுக்கு அதுவே போதுமானதாக இருந்தது. லவ் பண்ணவைத்துவிடலாம் என்று நினைத்தான். ''ரொம்ப தேங்ஸ் வளரு'' என்று பொத்தென்று குதித்தான்.

**சவாலே சவால்!**

''அடடே என்ன அழகு' படத்தில் பாட்டு சீன் வரும்போது தியேட்டரிலிருந்து 'தம்' அடிக்க யாராவது வெளியே போனா நான் சினிமாவ விட்டுடுறேன்''னு சவால் விடுகிறார் இயக் குநர் ஜெயம் முருகன். இந்தப் பாடல் காட்சி ஊட்டி மெரால்டு பகுதியில் இதுவரை யாரும் பார்த்திராத கோணத்தில், விசேஷ அனுமதி பெற்று படமாக்கியிருக்கிறார். 4 நிமிடங்களே வரும் இப்பாடலில் 'அடடே என்ன அழகு..!' என்ற ஒரே ஒரு வரியும், ஹம்மிங் மட்டும்தான் வருகிறதாம். (நினைத்தாலே இனிக்கும் - ஹம்மிங் போல) ஜெயா டீ.வி.யில் எஸ்.பி.பி, '' 20 வருடங்களுக்குப் பிறகு கிடைச்ச அருமை யான பாடல் இது''ன்னு சொன்னதில் அவார்டு வாங்கின பெருமையில் பூரித்திருக்கிறார். ஒரு பாடல் காட்சியில் ரஷ்யன் கேர்ள்ஸ் 30 பேரும், பாய்ஸ் 30 பேருமென 40 லட்சம் செலவில் செட் செய்திருக் கிறார்களாம். ஜெயம் முருகனின் சவாலுக்காகவே இந்தப் பாடல் காட்சி ஏகோபித்த எதிர்பார்ப்பைக் கிளப்பியிருக்கிறது.

**-சசி**

''டேய், எங்கடா போற?''

''வீட்டுக்குத்தான். இன்னிக்குப் பட்ட அவமானத்துக்கு ஒரு மருந்து வேணு முன்னுதான் உன்னிய வரச் சொன்னேன். நீ சொன்ன ஒருவார்த்த போதும் வளரு. என்னிய புடிக்காம இல்லன்னு நீ சொன் னத, புடிச்சிருக்குன்னு சொன்னதாவே எடுத்துக்கறேன். நான் போறேன்.''

''டேய், டேய்...'' அவள் அழைக்க அழைக்க நில்லாமல் விறுவிறுவென்று போனான்.

பள்ளி மைதானத்தைக் கடக்கும்போது, நண்பர்கள் சிலர் ஒரு பெரிய பாறையைத் தூக்க முயற்சி செய்துகொண்டிருப்பதைக் கண்டான். காலம் காலமாக மாணவர்கள் முயற்சி செய்யும் விஷயம் அது. மைதானத் தில் அந்தப் பாறையை யார் கொண்டுவந்து போட்டது என்று தெரியவில்லை.

''நகருங்கடா'' என்று பத்மநாபன் சொன் னான்.

''இவுரு தூக்கப்போறாராம்டா.''

பத்மநாபன் நிமிர்ந்து பார்த்தான். ''ஆமா. தூக்கட்டா? என்ன பெட்டு?''

''தூக்கு பாப்பம்?''

முடியும் என்று உறுதியாகத் தோன் றியது. இன்று தொடங்கி முழுப் பரீட்சை வரை சிந்தனையைச் சிதறவிடாமல் ஒழுங் காகப் படித்து, க்ளாஸ் ஃபர்ஸ்ட் வாங்கிவிடுவது என்று உறுதி கொண்டான். வளர்மதி பிர மித்து நின்று, தன் காதலை அங்கீகரிக்க இனி அதுவே தலைசிறந்த வழி. தன் னால் முடியுமா? கண் டிப்பாக முடியும். தன் னால் மட்டுமே முடியும்.

ஹுஃப் என்று பாறை யைப் பிடித்தான். தன் முழு பலத்தையும் பிர யோகித்துத் தூக்கினான்.

''டேஏஏஏய்!!'' நண்பர் கள் வியப்பில் வாய் பிளக்க, இதைப் பார்க்க வளர்மதி அருகே இல்லையே என்று ஏங்கினான்.

அது பிரச்னையில்லை. சில தொண்டர் கள் எப்போதும் இருக்கிறார்கள். தகவல் ஒலிபரப்புத் தொண்டர்கள்.

''வளரு, தெரியுமா? பத்மநாபன் மாப்ளகல்லத் தூக்கிட்டான்!''

மணப்பெண் வெட்கப்படுவாள். புன் னகை செய்வாள். குடுமி, ஐ லவ் யூடா என்பாள். போதும். நினைத்தால் இனிக் கிறது. மிகவும் இனிக்கிறது. பின்னத்தின் சுருங்கின வடிவம்கூட எளிமையான தாகவே இப்போது தெரிகிறது.

**(தொடரும்)**

# காந்தியாவது எப்படி?

''காங்கிரஸ் கட்சியிலுள்ள தலைவர்கள், நான் எப்போது கட்சியைவிட்டு வெளியேறுவேன் என்று எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனர். என்னிடமுள்ள வெப்பம் அவர்களைச் சுடுகிறது. ஆனால், நான் இருக்கிறவரை அந்த வெப்பத்தின் அளவு குறையாது. எனவே, நான் அவர்களை விட்டு விலகி நிற்கிறேன். பாரதியையும், விவேகானந்தரையும் இளைஞர்கள் படிக்க வேண்டும். காந்தியைப் போல உண்மைத் தன்மையுடன் இருக்க வேண்டும். இதை நான் சொன்னால், என் கட்சியைச் சார்ந்த நண்பர்களுக்குக் கசக்கிறது. ஆட்டுப்பால் குடிப்பதும், வேர்க்கடலை சாப்பிடுவது மட்டுமல்ல காந்தியம். மனச்சாட்சிக்கு உண்மையாய் இருத்தலே காந்தியத்தின் முதல்படி! காமராஜரையும், காந்தியையும் குறை சொன்ன சரித்திரத்துக்குச் சொந்தக்காரர்கள் நாம்'' என்று தமிழருவி மணியன் அக்னி நட்சத்திரத்துக்குப் போட்டியாகப் பேசியது அரசியல் மேடையிலல்ல: 'மகாகவி பாரதி' குறித்து தாம் எழுதிய 'கனவு மெய்ப்பட வேண்டும்' புத்தக வெளியீட்டு விழாவில்! இப் புத்தகத்தைப் பதிப்பித்த 'தென்திசை' பதிப்பகம் இவ்விழாவினை சென்னை பிலிம்சேம்பர் அரங்கில் நடத்தியது!



* புத்தக வெளியீட்டு விழாவில்...

'கனவு மெய்ப்பட வேண்டும்' புத்தகத்தை வெளியிட்டுப் பேசிய கம்யூனிஸ்ட் தலைவர் நல்லக்கண்ணு, ''பாரதியார் தமது வாழ்நாளில் சந்தோஷமாக வாழ்ந்தது கிடையாது. அவர் இறந்த பிறகும் விமர்சனம் என்ற பெயரில் அவரைப் பிரேதப் பரிசோதனை செய்வது வேடிக்கையானது. பாரதி முற்போக்கானவர். இதை தமிழருவி மணியன் தெளிவாக விளக்கியிருக்கிறார்'' என்றார்!

புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு பேசிய மாநில திட்டக் குழு துணைத் தலைவர் மு.நாகநாதன், ''பாரதியார் தனி மனிதனல்ல; ஓர் இயக்கம் பொதுவான மனிதனுக்கு வலது பக்க மூளை இசை உணர்வும், இடது பக்க மூளை சிந்திக்கும் ஆற்றலும் கொண்டது. பாரதிக்கு இரண்டு பக்க மூளையும் சிறப்பாகச் செயல்பட்டது'' என்றார்.

''புற்றீசல் போல பெருகி வரும் புத்தகச் சந்தையில், சில புத்தகங்களைப் பாதுகாக்க வேண்டியிருக்கும். அதில் முதன்மையானது தமிழருவி மணியன் புத்தகம்'' என்றார் இறையன்பு ஐ.ஏ.எஸ்.

விழாவில், எழுத்தாளர் பிரபஞ்சன், நடிகர் சிவகுமார் உள்ளிட்ட அறிஞர்கள் கலந்துகொண்டனர். விழாவுக்கு 'தென்திசை பதிப்பக'த்தின் பதிப்பாளர் மை.பா.நாராயணன் தலைமை தாங்கினார்.

– கதிர்பாரதி

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2008



படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே!
நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!

**முதல் பரிசு - ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு - ரூ.5000/-**

**தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.**

**யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.**

**விதிமுறைகள் :**

★ கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது. சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

★ படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2008'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 032.**

✱ **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 16.**

✱ **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.**

*படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.*

**– ஆசிரியர்**



# ''எனக்கு வாய்ப்பூட்டுப்

**''தமிழ்நாட்டில் கள்ளச்சாராயமும் கஞ்சாவும் பெருக்கெடுத்து ஓடுகின்றன என்று நான் சொன்னதைத்தான், இப்போது ஒசூரில் நிகழ்ந்த கள்ளச்சாராயச் சாவுகள் நிரூபித் திருக்கின்றன. மூதறிஞர் ராஜாஜி கொட்டும் மழையில் கலைஞர் வீட்டுக் குச் சென்று, 'சாராயக் கடைகளைத் திறக்க வேண்டாம்' என்று கேட்டுக்கொண்டார். ஆனால், அதை கலைஞர் கேட்கவில்லை. நான்கு தலைமுறைகள் குடியால் பாழாகி விட்டன. தமிழகத்தைச் சீரழித்துவிட்டார் கலைஞர்''– கோடை அனல் காற்றாய்ச் சுட்டெரிக்கிறார் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸ்.**

***பூரண மதுவிலக்கு சாத்தியமில்லை என்கிறாரே கருணாநிதி?***

''மதுக்கடைகளை மூடினால் அரசாங்கத்துக்கு வருமான இழப்பு என்பதை ஏற்க நான் தயாராக இல்லை. 'ஒரு துளி கள்ளச்சாராயம் கூட இல்லாமல் செய்ய முடியும் என்பதையும், மதுவினால் வரும் வருமானத்துக்கு மாற்றாக, வேறு வழிகளில் வருவாய் பெற முடியும் என்பதையும் மாதிரி பட்ஜெட்டில் நாங்கள் சொல்லியிருக்கிறோம். இதையெல்லாம் கேட்பதற்கு ஆட்சியாளர்கள் தயாராக இல்லை. காரணம், மதுபான ஆலை உரிமையாளர்களுக்கு வருமானம் போய் விடுமே! அரசியல்வாதிகள், காவல் துறை மற்றும் ரௌடிகள் ஆகியோர் கை கோத்துக் கொண்டு செயல்படுவதால்தான், எல்லா கிராமங்களிலும் கள்ளச் சாராயம் ஆறாக ஓடுகிறது. மதுவால் வரும் வருமானத்துக்கு பத்தாயிரம் கோடி என்று இலக்கு வைத்திருக்கிறார்கள். இது மக்களின் ஆரோக்கியத்துக்கு வைக்கும் வேட்டு அல்லவா?''

***தி.மு.க. அரசு தேர்ச்சி பெறவில்லை என்று சொன்னீர்கள். எந்தெந்தத் தளங்களில் தவறிவிட்டார்கள் என்று சொல்ல முடியுமா?***

''ஒரு மாநிலத்தின் வளர்ச்சியைக் கணக்கிடும்போது, கல்வி, வேலை வாய்ப்பு, வறுமை ஒழிப்பு இந்த மூன்றிலும் முன்னேற்றம் வேண்டும். இங்கே கல்வி, பெரும் வியாபாரம் ஆகி விட்டது. தனியார் பொறியியல் கல்லூரிகள் அடிக்கும் கொள்ளைகளுக்கு, எல்லையே இல்லை. துவங்க வரும் 31 தனியார்

# போட முடியாது!''

## - சூடாகும் டாக்டர் ராமதாஸ்



பொறியியல் கல்லூரிகளில், ஏகப்பட்ட பணம் நன்கொடையாக (capitation fees) வசூலித்தார்கள் என்ற குற்றச்சாட்டு எழுந்தது. கமிட்டி போட்டார்கள். விசாரணை நடந்ததா? முடிவு என்ன? யாருக்கும் தெரியாது. இந்த வருடமும் கொள்ளை தொடர்கிறது. மழலையர் வகுப்பிலிருந்து உயர் வகுப்பு வரை சமச்சீர் கல்வி வேண்டும் என்று கரடியாய்க் கத்துகிறோம். அதற்கான நடவடிக்கைகள் எதுவும் இல்லை. சென்ற ஆண்டு வரை 50 லட்சம் பேர் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து வேலைக்காகக் காத்திருக்கிறார்கள். தினசரி ஒரு புரிந்துணர்வு ஒப்பந்தம் போட்டு, ஆயிரக்கணக்கான கோடி முதலீடு வருகிறது என்று சொல்லும் முதல்வர், எத்தனை பேருக்கு வேலை கொடுத்தார்கள். வெள்ளை அறிக்கை வெளியிடுவாரா? விவசாயிகளுக்கு இரண்டு ரூபாய்க்கு அரிசியும், இலவசங்களும் போதுமா? விதை, உரங்கள் விலை ஏகமாக எகிறிவிட்டதே. விவசாய உற்பத்திக்கு உரிய விலை கிடைப்பதில்லையே.

ஏறிய சிமெண்ட் விலை அப்படியே தான் இருக்கிறது. அரசு சகாய விலையில் சிமெண்ட் கொடுக்கும் என்றார்கள். இப்போது அது பற்றிப் பேச்சு எதுவும் இல்லை. கட்டுமானப் பொருட்களின் விலை உயர்வால், அந்தத் தொழில் ஆபத்தில் இருக்கிறது.

வெளிநாட்டுக்காரர்களும், வெளி மாநிலத்தவரும்தான் தொழில் துவங்க தமிழகம் வருகிறார்கள் என்கிறார் கலைஞர். ஆர்.வி. காலத்தில் தமிழ்நாட்டை தொழில் வளமாக்கிய டி.வி.எஸ். மற்றும் செட்டி நாட்டுத் தொழிலதிபர்கள் போன்றோரை, தமிழக அரசாங்கம் ஊக்குவிக்காததன் காரணம் என்ன? இப்போது தமிழகமெங்கும் கொலை, கொள்ளை, கற்பழிப்பு என்று அன்றாடம் சங்கிலித் தொடர் போல சம்பவங்கள். முன்பு ஒரு முறை காவல் துறைக்கு ஈரல் கெட்டுவிட்டது என்றார் கலைஞர். இப்போது காவல் துறைக்கு ஈரலும் இல்லை; இதயமும் இல்லை!''

***சட்டசபையில் உங்கள் கட்சி உறுப்பினர்களின் பேச்சில் இந்த அளவு காரம் இல்லையே!***

''ஏன் இல்லை? நானல்லவா வகுப்பெடுத்து அனுப்புகிறேன். என் கருத்தைத் தான் அவர்கள் பேசுகிறார்கள். ஆனால், மீடியா அவற்றை இருட்டடிப்புச் செய்கிறது. சட்டமன்றப் பதிவுகளைப் போய்ப் பாருங்கள்.''

> ''அரசியல்வாதிகள், காவல் துறை, ரௌடிகள் ஆகியோர் கை கோத்துக்கொண்டு செயல்படுவதால்தான் கள்ளச்சாராயம் பெருக்கெடுத்து ஓடுகிறது!''

**2011ல் பா.ம.க. ஆட்சிக்கு வரும்போது தாராளமாக அவர்கள் விரும்பியதைச் செய்து கொள்ளலாம் என்கிறாரே கலைஞர்?**



''இது ஆத்திரத்தால் வரும் பேச்சு. 'குழி பறிக்கிறோம்' என்றெல்லாம் சொல்லி, எனக்கு வாய்ப்பூட்டு போடப் பார்க்கிறார். மத்தியில் இடதுசாரிகள் ஆதரவோடுதான் கூட்டணி ஆட்சி நடக்கிறது. குறைந்தபட்ச செயல் திட்டம் இருக்கிறது. அடிக்கடி கூட்டம் போட்டு விவாதிக்கிறார்கள். மேற்கு வங்கத்தில், அரசில் பொறுப்பு வகிக்கும் கூட்டணி கட்சியே பந்த் நடத்துகிறது! ஆக்கபூர்வமான கருத்துகளை எடுத்துக்கொண்டு, தோழமை கட்சிகளுடன் அடிக்கடி ஆலோசனை நடத்த வேண்டும். இப்போது, புதுத் திருப்பமாக மணல் விற்பனையை மறுபடியும் தனியாருக்கே விடப்போவதாக, ஐந்து அமைச்சர்கள் கூடி சமீபத்தில் முடிவெடுத்தார்கள். இது 2003ல் உயர்நீதி மன்றம் சொன்ன கருத்துக்கு எதிரானது. நான் கடுமையாக எதிர்ப்புக்குரல் கொடுத்தவுடன் தோழமை கட்சிகளின் கூட்டத்தைக்கூட்டி பழைய முறையைத் தொடர உத்தரவிட்டிருக்கிறார் கலைஞர். பல சமயங்களில் தமது அரசு மைனாரிட்டி அரசு என்பதையே மறந்து விடுகிறார்.

## "ஆக்கபூர்வமான தொடக்கம்!"

**பா.ம.க.வின் அணுகுமுறை குறித்தும் அவர்கள் தயாரித்தளித்த மாதிரி பட்ஜெட் குறித்தும், தமது ஆக்கபூர்வமான விமர்சனங்களை முன் வைக்கிறார் ஐக்கிய நாடுகள் முன்னாள் ஆலோசகர் ப.ஸ்ரீ. இராகவன்.**

* சமூகம் - நாட்டு நலன் தொடர்பாக, மக்களின் சிந்தனையைக் கிளறிவிடுவதில் தமிழக அரசியல் கட்சிகளுள் பா.ம.க.வுக்குத்தான் முதலிடம்.

* கேளிக்கைகளில் வீணாகும் இளைஞர்களை மீட்டெடுத்து, ஆக்கபூர்வமாகச் செயல்படுத்துவதில் அதிக முனைப்பு காட்டுகிறது.

* 2020ல் தமிழகம் வளம் கொழிக்கும் மாநிலமாக மாற, தொலைநோக்குத் திட்டங்கள் அடங்கிய பிரசுரங்களைத் தொடர்ச்சியாக வெளியிடுகின்றனர்!

* இன்றைய உண்மை நிலையை அலசுவது, நாளைய தேவைகள், வசதிகள் ஆகியவற்றைப் புள்ளிவிவரத்தோடும், ஆதாரங்களுடனும் பேசுவது மிகவும் கவனத்துக்குரியது.

* 2020ஆம் ஆண்டுக்கான தொலைநோக்குத் திட்டத்தில் கூறப்பட்டிருக்கும் திட்டங்கள் அரிய பொக்கிஷம்.

* நியாயமற்ற - சமச்சீரற்ற வளர்ச்சி, வேலை வாய்ப்புகளைப் பெருக்காத திரிக்கப்பட்ட தொழில் வளர்ச்சி, நலிவடைந்து

***பெரிய அளவில் ஊழல் குற்றச்சாட்டு ஏதும் இல்லை என்கிறார்களே?***

''ஒவ்வொரு துறையிலும் நடக்கும் தவறுகளை நான் சுட்டிக்காட்டுகிறேன். மீடியாதான் ஊழலை அம்பலப்படுத்த வேண்டும்.''

***இன்றைய விலைவாசி உயர்வுக்கு மத்திய அரசும் காரணம் அல்லவா... அதைப் பற்றி நீங்கள் பேசவில்லையே?***

''பிரதமரைச் சந்தித்தபோது விலைவாசியைக் குறைக்க என் யோசனைகளைச் சொல்லியிருக்கிறேன்.''

***'எய்ம்ஸ்' (AIMS) விவகாரத்தில் அன்புமணி அதிரடியாகச் செயல்பட்டதை நிராகரித்து உச்சநீதி மன்றம் தீர்ப்பு வழங்கி விட்டதே?***

''அன்புமணிக்கும் வேணுகோபாலனுக்கும் எந்தப் பிரச்னையுமில்லை. இட ஒதுக்கீடு விவகாரத்தில் டாக்டர்களுக்கும், மாணவர்களுக்கும் ஆதரவாகச் செயல்பட்டார் வேணுகோபால். மேலும் ஓய்வு பெறும் வயது குறித்து, பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டம், எய்ம்ஸ் போன்ற வேறு பல நிறுவனங்களுக்கும் பொருந்தும்.''

**''தமிழக அரசு, எத்தனை பேருக்கு வேலை கொடுத்தது என்று வெள்ளை அறிக்கை விடுவாரா கலைஞர்?''**

***அன்புமணிக்கு இது ஒரு கரும்புள்ளி தானே?***

''அன்புமணியை உலக அளவில் பாராட்டி விருது கொடுக்கிறார்கள். ஆனால், நமது நாட்டில் புகையிலை லாபியும், இட ஒதுக்கீட்டுக்கு எதிரான மீடியாவும் அன்புமணியை அகற்றவேண்டும் என்கின்றன. ஆனால், பிரதமர் அன்புமணியைப் பாராட்டுகிறார்.''

**– ப்ரியன்**

படம் : **ஸ்ரீஹரி**

---

வரும் கிராமப்புற நிலை, பின்தங்கிய வேளாண்மை, அமைப்புசாரா பொருளாதாரம் மீதான அலட்சியம்... ஆகியவற்றின் விளைவுகளைத் தெளிவாக வெளியிட்டிருக்கிறார்கள்.

* பிரச்னைகளுக்குத் தீர்வாக சொல்லப்பட்டிருக்கும் திட்டங்களும் சிலாகிக்கும்படி இல்லை!

* தமிழகத்துக்கே உரித்தான மலர்ச் சாகுபடி, ஏற்றுமதி தொடர்பான வாய்ப்புகளைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

* மரபுசாரா மின் உற்பத்திக்கு முக்கியத்துவம் தரும் விவரங்கள் இல்லை!

* குறிப்பாக, ஊழல் பற்றிப் பட்டும் படாமல்தான் சொல்லியிருக்கிறார்கள்!

* புத்தகம் முழுக்க நீண்ட நீண்ட வாக்கிய அமைப்பு. படிக்கச் சற்றுப் பொறுமை வேண்டும்.

* திட்டங்களை எழுதிய நிபுணர்கள் பெயரைச் சேர்த்திருக்கலாம்! ஏனோ தவிர்த்திருக்கின்றனர்!

* பள்ளி நிலையிலிருந்தே ஆங்கிலத்தை வளர்க்க வேண்டும் என்று குறிப்பிட்டிருப்பது மகிழ்ச்சியளிக்கக்கூடிய ஆச்சர்யம்!

* ஆக்கபூர்வமான இம்முயற்சிக்குத் தூண்டுகோலாக இருக்கும் பா.ம.க. நிறுவனர் டாக்டர் ராமதாஸைப் பாராட்டுகிறேன்.



* ப.ஸ்ரீ. இராகவன்

பிரபஞ்ச இயற்பியல் கொஞ்சம் விநோதமான விஷயம். வேலையற்றவர்கள் கயிற்றுக் கட்டிலில் மல்லாக்கப் படுத்துக்கொண்டு பகல் கனவு காண்பது மாதிரிகூட சில நேரம் அது தோன்றும். ஆனாலும் மெய்ப்படக்கூடிய கனவு.

உலகம் மட்டுமில்லை, அதோடு கூட சூரிய மண்டலத்தில் வலம் வரும் கோள்கள் எல்லாம் சேர்ந்து அழியப் போகின்றன. மற்ற நட்சத்திரங்கள், அவை சார்ந்த கோள்கள் என்று நமக்குக் கொஞ்சம் போல் தெரிந்த இந்தப் பிரபஞ்சமே விரைவில் காணாது போகும். இது பற்றிய ஒரு சுவையான ஊகத்தைப் பார்க்கலாம்.

ஊகத்துக்குள் சட்டென்று தாவிக் குதிக்க முடியாது. வெட்டவெளியில் தொடங்கி மெல்ல முன்னேறலாம்.

# 'ஆறாயிரம் கோடி'




வெட்டவெளியில் இருப்பது என்ன? காற்று என்கிறீர்களா? இருக்கலாம். ஆனால், கரும் சக்தி என்பதே சரியான விடை. கண்ணால் காண முடியாதது. ஏற்படுத்தும் விளைவுகளை வைத்துதான் இருப்பதை உணர முடியும். இது சீரான அடர்த்தியோடு வெளிகளை நிறைக்கிறதாம். கரும் சக்தி என்ற பெயர், எதிர்மறையான அர்த்தத்தில் இல்லை. புதிரானது என்பதைக் கோடிட்டுக் காட்டவே சூட்டப்பட்டிருக்கிறது. புதிர் மட்டுமா... புனிதமும்தானா? தெரியாது.

உண்மை என்னவென்றால், பிரா :ஞ்சமானது தொடர்ந்து விரிவடைந்து கொண்டே போகிறது. காரணம், இதே

கரும் சக்திதான்.

சகலமானதையும், தன்னை விட்டு விலகத் தூண்டும் எதிர்மறை ஈர்ப்பைக் கொண்டது கரும் சக்தி. கரும் சக்தி எதிர்மறை அழுத்தத்தைப் பிரயோகிக்கும் போது, அது பின்னிப் பிணைத்திருக்கும் பிரபஞ்சம் விலகி ஓடுகிறது. உலோகத் துண்டில் கட்டி வைத்த பெரிய கோயில் மணியின் பாரத்தால் உலோகத் துண்டு கண்ணுக்குத் தெரியாத அளவு சற்றே விரிவடைவது போன்று, விலகி நகரும் பிரபஞ்சமும் சற்றே விரிவடைகிறது. இந்த இழுப்பும், விரிவாக்கமும் பிரபஞ்சம் தோன்றிய நாளில் இருந்தே தொடங்கிவிட்டன. நாளுக்கு நாள் இப்படி விரிவடைவது அதிகரித்து வருகிறதே தவிர குறையவில்லை. கரும் சக்தியின் அழுத்தமும் தொடர்ந்து கூடிக் கொண்டு போகிறது. இந்தச் சக்தி இழுக்க இழுக்க, பிரபஞ்சம் மேலும் விரிவடைவது எங்கே போய் முடியும்? இதுக்கு மேலே தாங்காது சாமி என்று ஓய்ந்து போவதில்தான். அப்போது நிகழப்

# ரகசியம்!

போவது ஓர் அபூர்வமான காட்சி.

பிரபஞ்சம் சும்மா ஓய்ந்து போகாது. கொக்கியில் மாட்டி பலம் கொண்ட மட்டும் இழுக்கப்பட்ட பழைய நாலு முழ வேட்டி போல், நொந்து நூலாகிப் படீரென்று அறுந்து சுக்குச்சுக்காகச் சிதறிப் போகும். இதற்குப் பெயர் மாபெரும் கிழிப்பு (The Big Rip).

இந்த மாபெரும் பிரபஞ்சக் கிழிப்பு, கட்டம் கட்டமாக அரங்கேறும். க்ளைமாக்ஸுக்குக் கொஞ்ச நேரம் முன்னால், அதாவது ஒரு கோடி வருடம் முந்தி, ஈர்ப்பு விசை குறைவதால், நட்சத்திரத் தொகுதிகள் துண்டுதுண்டாகத் தொடங்கும். கடைசிக்கு முந்திய சீனில் கதாநாயகனின் அம்மா நீளமாக வசனம் பேசி உயிரை விடுவதுபோல், நம்முடைய விண்மீன்கள், கோள்களின் தொகுதியான பால்வழி (Milky Way), ஒவ்வொரு கிரகமும், நட்சத்திரமும் வெடித்துச் சிதறி சூனியமாக, வானப் பெருவெளியில் இருந்து விடை பெறும்.

மாபெரும் கிழிப்பு நடக்க சில மாதங்கள் முன்னால், சூரியனுக்கும் பூமிக்கும் இடையே நிலவுகிற கரும் சக்தியின் அழுத்தம் எக்கச்சக்கமாக அதிகரிப்பதால், பூமி சூரியனைச் சுற்ற மறந்து வானப் பெருவெளியில் அனாதையாக மிதக்கத் தொடங்கும். பிரபஞ்சத் திரைப்படம் முடிவடைய ஒரு மணி நேரம் இருக்கும்போது, பூமியும் வெடித்துச் சிதறி உயிர் விடும்! பிரபஞ்சம் ஆடி அடங்க ஒரு வினாடிக்கும் மிகக் குறைவான நேரமே இருக்கும்போது, சகல அணுக்களும் தாமே பிளந்து, நினைத்துப் பார்க்க முடியாத அளவு அணுசக்தி வெளியாகும். பயப்பட வேண்டாம். இதெல்லாம் நடக்க, இன்னும் ஆறாயிரம் கோடி வருடங்கள் பிடிக்கும். ●



அதுக்குள்ள தசாவதாரம் ரிலீஸ் ஆகிடுமான்னு தெரியலயே!

# கடைசிக் கடிதம்!

சத்யா எழுந்தான். அவளுடன் சண்டை போட்டு ஒருவாரம் ஆகிறது. இன்றுவரை அவளிடமிருந்து எந்த ஒரு ரியாக்‌ஷனும் இல்லை. ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாக சந்தியாவுக்குக் கடைசிக் கடிதம் எழுத முடிவு செய்தான்.

சந்தியாவுக்கு, தோழர் தோழியர் அதிகம். எந்நேரமும் அவள் ஃபோன் ஓயாமல் அடித்துக் கொண்டேயிருக்கும். இவ்வளவு நேரம் பேசறயே வாய் வலிக்காதா என்று கேட்டால், உன்கிட்ட பேசறப்ப மட்டும் இனிப்பா இருக்கா என்று பதிலடி கொடுப்பாள்.

மெயில் அனுப்பலாமா... இல்லை ஃபோன் செய்து சாரி கேட்டு விடலாமா... என்ற ரீதியில் யோசித்தான். மெயில்தான் பெஸ்ட் என்று முடிவு செய்து ஜிமெயிலைத் திறந்தான்.

இன்பாக்ஸில் ஒரு மெயில் இருந்தது. சந்தியாதான். பொட்டில் அடித்த மாதிரி இருந்தது தலைப்பு 'கடைசிக் கடிதம்.'

# மேடைப்பேச்சு!

எழுத்தாளர் வெற்றிமாறன் தொண்டையைச் செருமிக் கொண்டு தொடர்ந்தார், "ஆகவே இளம் எழுத்தாளர்களே, நிறைய படியுங்கள். கண்ட கண்ட குப்பைகளைப் படித்துவிட்டு அதை அப்படியே கக்காதீர்கள். உங்களுக்கென்று ஒரு சுயத்தை உருவாக்குங்கள். எதிர்வரும் தலைமுறை உங்கள் எழுத்தை அரிச்சுவடியாகக் கொள்ளட்டும். கொஞ்சம் சுமாராக எழுதிக் கொண்டிருந்தவர்கள் பாதிப்பேரை சின்னத் திரை தன் வசமாக்கிக் கொண்டது. ஒரு சிங்கின் டீக்கு சிங்கியடித்துக் கொண்டிருந்த எம் எழுத்தாளப் பெருந்தகைகள் இப்ப

# ரயில்

அவன் பெயர் அனேகமாக பார்த்த சாரதியாகவோ, சேஷாத்ரியாகவோ, இருக்கவேண்டும். நெற்றியில் பெரிய நாமம். முகத்தில் ஒரு தீட்சண்யம். வில்லிவாக்கத்தில் ஏறி பீச் ஸ்டேஷனில் இறங்குவான்.

அவன் கையில் தினமும் ஒரு புத்தகம் கட்டாயம் இருக்கும். அது நிலாசெல்வியின் கவிதைத் தொகுப்பு. இரண்டு மாதமாக நானும் விடாமல் கவனித்து வருகிறேன். அதே புத்தகம்தான்

ஒரு நாள் எதேச்சையாக என்னிடம் பேசினான். "பீச் பாஸ்ட் போயிடுச்சுங்களா மேடம்?"

"இல்லைங்க. இனிமேதான் வரும்." நானும் பொறுக்க முடியாமல் கேட்டு விட்டேன். "உங்க பேர் என்ன?" அவன் புன்னகைத்தபடியே "மாதவன்" என்றான். "உங்க பேர் மேடம்?" என்றான்... "சொல்றேன்...

- உமா ஷக்தி

லேப்டாப் என்ன அசிஸ்டெண்ட்ஸ் என்ன - ஒரு குழுவாதான் இறங்கிக்கான்யா? மேலும் ஒரு அரை மணி நேரம் பேசிவிட்டு வெற்றிப் புன்னகையுடன் தம் இருக்கையில் அமர்ந்தார்.

அவருடைய செல்ஃபோன் ஒலித்தது. அப்படியா சார், ''என்னைய செலக்ட் பண்ணிருக்கீங்களா... கேக்கறதுக்கு ரொம்பச் சந்தோஷமா இருக்கு... இப்பவே வரணுமா... கட்டாயம் வர்றேன்... வர்றேன்.''

விடைபெற்றுக் கொண்டு ஓடினார் எழுத்தாளர் வெற்றிமாறன். இயக்குநர் தங்கதுரையைத் தேடி.



# சிநேகிதம்!

அதுக்கு முன்னாடி தினமும் ஏன் இதே புத்தகத்தை எடுத்துட்டு வர்றீங்க? இந்தக் கவிதைகள் அவ்வளவு பிடிக்குமா...''

''அதெல்லாம் இல்லைங்க. கவிதைனாலே கொஞ்சம் அலர்ஜி. இது ஒரு ஃப்ரண்டு எப்பவோ கொடுத்தது. என்னோட ட்ரெயின் பாஸ் இதுல வச்சிருக்கேன். அதான்.... சரி உங்க பேரைச் சொல்லவேயில்லையே'' என்றான்.

''நிலாச் செல்வி''





# பிறந்த Vs. புகுந்த வீடு

**பிறந்த வீடு - ஏப்ரல் 5, 2007**

அருணா, அலுவலகத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள். புயல் அடிப்பது போல ஒரே அமளி துமளி.

''ஏய், என் சீப்பை யாரு எடுத்தது? இனிமே தொட்டீங்க கையை உடைச்சுடுவேன்'' தங்கை ரம்யாவைப் பார்த்து உருமினாள்.

''அப்பா, உன் ஓட்டை ஸ்கூட்டிய எங்கயாவது காயலான் கடைக்குப் போட்டுட்டு, ஒரு நல்ல வண்டி வாங்கு'' என்று அப்பாவை மிரட்டினாள்.

**புகுந்த வீடு- மே 27, 2008**

அருணா, அலுவலகம் கிளம்பிக் கொண்டிருந்தாள்.

''அண்ணி, என் பென் ட்ரைவ்வை யாரு எடுத்தது? கொஞ்சம் தேடித் தாங்க...'' இது சாப்ட்வேர் கம்பெனியில் வேலை செய்யும் நாத்தனார் ப்ரியா.

''ஏம்மா ராகவனுக்குக் காரம் ஆகாதுன்னு தெரிஞ்சே அவனுக்கு இட்லிக்குக் காரச் சட்னி அரைச்சு வைச்சுருக்கே...'' இது மாமியார் சுகந்தி.

வெளியே பைக் உருமிக் கொண்டிருந்தது. ''ஏய் அருணா... எவ்வளவு நேரமா இப்படி நிக்கறது. சீக்கிரம் வர்றியா இல்ல, பஸ்சுல போறியா? பொறுமையில்லாமல் ராகவன் கத்திக்கொண்டிருந்தான்.


ந்தியா, சத்தியமாக ஏழை நாடு தான். ஆனால், என்ன மாயமோ தெரியவில்லை. ஒவ்வொரு வருடமும் 'உலகின் டாப் 10 பணக்காரர்கள்' பட்டியல் வெளியாகும்போது, அதில் ஒன்றிரண்டு இந்தியர்களாவது இடம் பிடித்துவிடுகிறார்கள்.

இந்த வருடம் நான்கு இந்தியர்கள். அவர்களில் முறையே லட்சுமி மிட்டல், முகேஷ் அம்பானி, அனில் அம்பானி. நான்காவது நபர்?


* குஷால் பால் சிங்

குஷால் பால் சிங். செல்லமாக, கே.பி. சிங். டி.எல்.எஃப். என்ற கட்டுமான நிறுவனத்தின் தலைவர். சமீபத்திய கணக்கெடுப்பின்படி, இவருடைய சொத்து மதிப்பு முப்பது பில்லியன் டாலர். ரூபாயில் சுமார் ஒரு லட்சம் கோடிக்கு மேல்!

கட்டடம் கட்டி அத்தனை ரூபாய் சம்பாதிக்க முடியுமா?

அதுதான் கே.பி.சிங்கின் ஸ்பெஷாலிட்டடி.

உத்தரப்பிரதேசத்தில் பிறந்த கே.பி.சிங், இங்கிலாந்தில் பொறியியல் படித்தவர். படிப்பை முடித்ததும், அங்கேயே வேலை. அதுவும் இந்திய ராணுவத்தில்.

அடுத்த ஒன்பது ஆண்டுகளில், கடின உழைப்பு, எதிலும் ராணுவ ஒழுங்கு, மிடுக்கான பழகுமுறை... என பல விஷயங்களை இராணுவத்தில்தான் கற்றுக்கொண்டதாகச் சொல்கிறார் சிங்.

அப்போது, கே.பி.சிங்கின் மாமனாருக்கு, டெல்லியில் வீடுகளைக் கட்டித் தருகிற பணி. அவருக்கு உதவுவதற்காக, ராணுவப் பணியிலிருந்து விலகி, கட்டுமானத்துறையில் கவனம் செலுத்தத் தொடங்கியிருக்கிறார்.

டெல்லியில், தனியார் கட்டுமான நிறுவனங்கள் புதிய காலனிகள், நகர்களை உருவாக்கமுடியாதபடி திடீரென்று அரசாங்க விதிமுறைகள் கடுமையாக்கப்பட்டன.

என்ன செய்யலாம்? யோசித்த சிங்குக்கு கண்ணில் பட்டது. பக்கத்திலிருந்த குர்காவ்ன் கிராமம். டெல்லியில்தானே வீடு கட்டக்கூடாது? இங்கே கட்டினால் தப்பில்லையே? மளமளவென்று குர்காவ்ன் கிராமத்து விவசாயிகளிடம் இருந்து நிலங்களை வளைத்துப்போட்டார்.




கே.பி.சிங்குக்குப் பைத்தியமா?

பின்னே? குர்காவ்ன் என்பது வெறும் பொட்டல் காடு. அங்கே நிலம் வாங்கி என்ன பிரயோஜனம்?

கே.பி.சிங்கின் சிந்தனை வேறுவிதமாக இருந்தது. இன்றைக்கு குர்காவ்ன் வெற்று நிலமாக இருக்கலாம். ஆனால், திட்டமிட்டு ஒழுங்குபடுத்தினால், டெல்லிக்குப் பக்கத்தில், அது இன்னொரு குட்டி நகரம்.

இந்தத் திட்டத்தை, ஒரு சின்னப் பிசிறுகூட இல்லாமல் நிறைவேற்றினார்.

## குர்காவ்னில் தொடங்கிய கனவை, இப்போது இந்தியாவெங்கும் கொண்டு செல்ல முடிவெடுத்திருக்கிறார் கே.பி.சிங்!

# 'சிங்'கம்!

டி.எல்.எஃப். சிட்டி என்று பெயரிடப் பட்ட இந்தக் குட்டி நகரம்தான், கே.பி. சிங்கின் விசிட்டிங் கார்ட். அதைப் பார்த்துவிட்டு, இந்தியாவில் இப்படி ஓர் இடமா என்று பல நிறுவனங்கள், தங்களுடைய அலுவலகங்களை அங்கே அமைக்கத் துடித்தார்கள்; துடிக்கிறார்கள்.

விளைவு, குர்காவ்ன் கிராமம் முழுவதும் மிகப் பிரம்மாண்டமான வளர்ச்சி கண்டது.

குர்காவ்னில் தொடங்கிய தன்னுடைய கனவை, இப்போது இந்தியாவெங்கும் கொண்டு செல்ல முடிவெடுத்திருக்கிறார் கே.பி.சிங். தன்னுடைய மகன் ராஜீவ், மகள் பியா உதவியுடன்.

வருங்காலத்தில், எங்கெல்லாம் நிலத்தின் மதிப்பு அதிகரிக்குமென்று கண் குத்திப் பாம்புபோல் கவனித்துக்கொண்டிருக்கிறது டி.எல்.எஃப். நிபுணர் குழு. உள்ளூர் விவசாயிகள், பொதுமக்களிடம் பேசி குறைந்த விலையில் நிலத்தை வாங்கி ஊறப்போடுவது, சரியான நேரம் வரும்போது, கட்டடங்களைக் கட்டி விற்றுவிடுவது. இதுதான் கே.பி.சிங்கின் வெற்றி ஃபார்முலா.

டி.எல்.எஃப். நிறுவனத்தின் இன்னொரு சிறப்பு அம்சம், பிரமாதமான மார்க்கெட்டிங்.

இந்தியா முழுவதும் பத்தாயிரம் ஏக்கர்களுக்குமேல் வளைத்துப் போட்டிருக்கிறது. அத்தனையிலும் கட்டடம் கட்டி முடிக்கிறபோது, கே.பி.சிங். உலகின் முதல் பணக்காரராக உயர்ந்தால்கூட ஆச்சர்யப்படுவதற்கு இல்லை!




என்.சொக்கன்

'கர்ப்ப கால சர்க்கரை நோயால், உலக அளவில் மற்றப் பெண்களைக் காட்டிலும், இந்தியப் பெண்கள் பதினொரு சதவிகிதம் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றனர்.'-அமெரிக்காவின் நியூயார்க் நகரில், சமீபத்தில் நடத்தப்பட்ட 'டயாபடீஸ் பார்லிமென்ட்' என்ற ஆய்வுக் கூட்டமைப்பில், இந்த அதிர்ச்சித் தகவலை வெளியிட்டது உலக சுகாதார அமைப்பு. இதில் கலந்துகொண்ட பாலாஜி மருத்துவமனையின் நீரழிவு நோய் நிபுணர் டாக்டர் வி.பாலாஜி கர்ப்ப கால சர்க்கரை நோய் குறித்து நம்மிடம் பேசினார்.

''டைப்-1, டைப்-2 சர்க்கரை வியாதிக்கும், கர்ப்பகால சர்க்கரை வியாதிக்கும் நிறைய வித்தியாசங்கள் இருக்கு. கர்ப்ப கால சர்க்கரை வியாதி, தாயோடு சேர்த்துக் கருவிலுள்ள குழந்தையையும் பாதிக்கக் கூடியது. டைப்-1, டைப்-2 முறையில் சாப்பிடுவதற்கு முன் சர்க்கரையின் அளவு 100க்குக் கீழும், சாப்பிட்ட 2 மணி நேரத்துக்குப் பிறகு 140க்குக் கீழும் இருக்கும். கர்ப்பிணிப் பெண் வெறும் வயித்துல இருக்கும்போது சர்க்கரையின் அளவு 90க்குக் கீழ் இருக்கணும். சாப்பிட்ட பிறகு ஒவ்வொரு மணி நேர இடைவெளியில் செய்யப்படும் பரிசோதனைகளில் சர்க்கரை அளவு கூடுதலா இருந்தா 'கர்ப்பகால சர்க்கரை வியாதி' இருக்குன்னு அர்த்தம். பலர் டைப்-1, டைப்-2 வகை டெஸ்ட் பண்ணிட்டு, கர்ப்பகால சர்க்கரை வியாதி இல்லைன்னு நெனைச்சுக்கறாங்க'' என்றார்.

கர்ப்பகால சர்க்கரை வியாதி எப்படி வருகிறது? என்று கேட்டபோது, ''ஒரு பெண் கர்ப்பமானதுக்கு அப்புறம் இயல்பாகவே 10லிருந்து 15 சதவிகிதம் இரத்த சர்க்கரையின் அளவு குறைஞ்சுடும். அதுக்கு ஹார்மோன்களோட உற்பத்தியும் ஒரு காரணம். அதாவது ஒரு பெண் கர்ப்பமாகும்போது ஈஸ்ட்ரோஜன், புரஜஸ்ட்ரான் ஆகிய ஹார்மோன்கள் உடலில் உற்பத்தியாகி, கணையத்துக்கு போய்டும். இதனால் இன்சுலின் உற்பத்தியையும் அதிகமாக்கிடும். இன்சுலின் அதிகமா சுரக்கறதாலதான் சர்க்கரையின் அளவு குறைஞ்சுடுது. தாயின் தொப்புள் கொடி வழியாக, தாயின் உடம்புல இருக்கற புரோட்டின், அமினோ அமிலங்கள் போன்ற சத்துகள் வயித்துல இருக்குற குழந்தைக்குப் போய்டும். இதனால் போதுமான அளவு சத்து குறைந்து சர்க்கரையின் அளவும் குறைஞ்சுடுது'' என்கிறார் டாக்டர் பாலாஜி.

கர்ப்பகால சர்க்கரை வியாதியால



என்னமாதிரி பிரச்னைகள் ஏற்படுது?

''தாயின் உடம்புல இரத்த சர்க்கரையின் அளவு அதிகமாகுறதால, தாயோட தொப்புள் கொடி வழியாக கருவுல இருக்கற குழந்தையை அது சென்று அடையும். கருவுல இருக்கற குழந்தையின் கணை யத்துல 11வது வாரத்தி லேயே இன்சுலின் சுரக்க ரெடியாக இருந்தாலும் பிறக்கற வரைக்கும் சுரக்காது. அப்படிச் சுரக்கவும்கூடாது. ஆனால், தாயிடமிருந்து சர்க்கரை குழந் தையை அடைந்தால், இன்சுலினைச் சுரக்க வெச்சுடும். இப்பிரச்னையோட பிறக் கற குழந்தைகளின் எடையும், உறுப்பு களும் 'பெரிதாக' காணப்படும். இதைத் தான் Big Baby என்றும் மைக்ரோ சோமியா என்றும் மருத்துவத் துறையில சொல் வோம். இந்தக் குழந்தைகள் பிற்காலத்துல, டைப்-2 சர்க்கரை வியாதியுள்ள குழந்தையா வளரக் கூடும்.

கர்ப்பகாலத்தில் இரத்தச் சர்க்கரை யின் அளவைக் கட்டுப்பாட்டுக்குள் வைச்சுக்கணும். சாப்பிடற உணவுல கார்போஹைட்ரேட் - மாவுச் சத்துகள்



* டாக்டர் வி.பாலாஜி

பிடலாம். சர்க்கரை இனிப்பு கள் கண்டிப்பா சாப்பிடக் கூடாது. இப்படியே உணவுக் கட்டுப்பாட்டுக்குள் இருந்து இரண்டு வாரம் கழிச்சு கர்ப்ப கால டயாபடீஸ் பரி சோதனை செய்து பார்க் கணும்.

கர்ப்பகாலத்துல இன் சுலின் போட்டுக்கிறதால பாதிப்பு ஏற்படும்னு பயப்படறாங்க. ரொம்ப தவறு. அப்படிப் பாதிப்பும் இல்லை. சர்க்கரை வியாதி மாத்திரைகள் தொப்புள் கொடி வழியாகப் போயி குழந்தையைப் பாதிக்கலாம். ஆனால், இன்சுலின் தொப்புள் கொடியைத் தாண் டிப் போகாதுன்னு ஆராய்ச்சிபூர்வமா நிரூபிக்கப்பட்டிருக்கு. குழந்தைக்குப் பால் கொடுக்கும்போது தாயின் உடம்பிலுள்ள சர்க்கரை மாத்திரைகள், பாலின் மூலம் சென்று, குழந்தைக்கு லோ ஷுகரை (குறைந்த சர்க்கரை அளவு) உண்டு பண்ணலாம். ஆனா, இன்சுலின் கொடுக்கிறதால அப்படிப்பட்ட பிரச்னை கள் எதுவும் வராது. இப்படிப்பட்ட வழி முறைகளைக் கடைப்பிடிச்சா, குழந்தை பிறந்தவுடனேயே கர்ப்பகால சர்க்கரை வியாதி தாயைவிட்டே ஓடிப் போயிடும்.

# கருவைத் தாக்கும் சர்க்கரை!

இருக்கிறதால, கொஞ்சம் கொஞ்சமா பிரித்துச் சாப்பிடணும். உதாரணத்துக்கு, காலையில ஒன்பது மணிக்கு ரெண்டு இட்லி சாப்பிட்டா, அதுக்கப்புறம் 11 மணிக்கு ரெண்டு இட்லின்னு சாப் குழந்தைக்கும் வராம பாதுகாத்துக்கலாம்'' என்கிறார் டாக்டர் பாலாஜி.

– சபரி

ஒரு வீடு கட்டி முடித்த பின்னர், அதற்கு விருது கிடைக்குமென யாராவது எதிர்பார்த்திருப்பார்களா? வாய்ப்பே இல்லை. ஆனால், ரெசிடென்ட்ஸ் அவேர்னஸ் அஸோசியேஷன், அஸோசியேஷன் ஆஃப் பிரிட்டிஷ் ஸ்காலர்ஸ் என்ற இரு அமைப்புகளும் இணைந்து உருவாக்கியுள்ள 'சுற்றுச் சூழலுக்கு இணக்கமான இல்லம்' என்கிற விருதினைப் பெற்றுள்ளது கோவை லீலாவதி - கோபி கிருஷ்ணா தம்பதியின் வீடு. எப்படி? அவர்களே சொல்கின்றனர்!



✱ சங்கமித்ரா



✱ கோபி கிருஷ்ணா



✱ லீலாவதி



✱ ஸ்வர்ணரேகா



"அடுக்குமாடிக் குடியிருப்பில் சொந்த ஃபிளாட்டில்தான் வசித்து வந்தோம். எங்க அப்பாவும் அம்மாவும் இயற்கைச் சூழல் விரும்பிகள். அவர்களுக்கு அடுக்குமாடிக் குடியிருப்பு வாசம் வெறுத்துப் போனது. புதுசா அழகான வீடு கட்டினால் என்ன வென்று எங்களிடம் கேட்டார்கள். உடனே 'யெஸ்' சொல்லிவிட்டோம்!'' என்கிறார் லீலாவதி - கோபிகிருஷ்ணா தம்பதியின் மூத்த பெண் சங்கமித்ரா. எம்.எஸ்.சி. இரண்டாம் ஆண்டு மாணவி.

"கோவை, பீளமேடு தண்ணீர்ப் பந்தல் ஏரியாவில், இருபது சென்ட் இடத்தை வாங்கிப் போட்டார்கள். சுமார் பத்தாயிரம் சதுர அடி காலி மனை. அதில் 2,750 சதுர அடிக்குக் கீழ்தளம். அதன் மேலே 1,250 சதுர அடிக்கு மேல்தளம் என வீடு கட்டத் தீர்மானிக்கப்பட்டது. கீழ் தளத்தில் மீதமுள்ள பரந்த இடத்தில் பசுமை போர்த்திய புல்வெளி; வண்ணவண்ண பூச்செடிகள்; வாழை, வேம்பு, தென்னை மரங்கள்; மூலிகைத் தோட்டம்; கீரைப் பாத்தி மற்றும் காய்கறித் தோட்டம். ஆங்காங்கு மழைநீர் சேகரிப்பு. "இருபது சென்ட் இடத்துக்குள் பெய்கின்ற மழை நீரில், ஒரு துளி நீர்கூட சுற்றுச்சுவர் கடந்து, வெளியே சென்று விடாத அளவுக்கு மிக நுண்ணிய வேலைப்பாடு'' எனப் பரவசம் கொள்கிறார் இளைய மகள் ஸ்வர்ணரேகா.

முன் பகுதியெங்கிலும் பச்சைக் கம்பளம் விரித்தது போன்ற பரந்த புல்வெளி. அதன் மையப் பகுதியில் அமர்ந்து ரசித்திட 'ப' வடிவ சிமென்ட் பெஞ்ச். வீட்டைச் சுற்றிலும் பசுமை நிறைந்துள்ளது.

"பழங்கால வீடுகளில் முற்றங்களைக் காணலாம். தற்போது எவருமே முற்றம் வைத்து வீடு கட்டுவதில்லை. அதனை எங்கள் வீட்டின் நடுவினில் அமைத்திருக்கிறோம். மழை பொழிவதை வீட்டிற்குள்ளேயே காணலாம். அந்த மழை நீர் நேராகத் தோட்டத்துக்குச் செல்வது போல குழாய்கள் பொருத்தியுள்ளோம். வீட்டின் எந்த அறைக்குச் சென்றாலும், இயற்கையான வெளிச்சமும், நல்ல காற்றும் பரவியிருக்கும். இரவிலும் குறைந்த அளவு வோல்டேஜ் நிறைந்த ஒளி தரும் மின் விளக்குகளை பயன்படுத்துகிறோம். முற்றம் எனப்




படும் 'ஓப்பன் கோர்ட் யார்ட்' பகுதியில் நீங்கள் வந்து நின்றால், மெல்லிய தென்றல் உங்களை வருடிச் செல்லும். இது முற்றிலும் கேரள பாணியில் கட்டப்பட்ட வீடு. இதற்கென திருச்சூர் சென்று, பல வீடுகளைப் பார்வையிட்டு வந்த பின்னரே இந்த வீட்டைக் கட்டினோம்!'' என்கிறார் லீலாவதி.

''கேரளாவில் தயாராகும் perforated wire cut bricks எனப்படும், மையப் பகுதியில் மட்டும் உள் வெற்றிடம் கொண்ட செங்கற்களைத் தருவித்தோம். அங்கிருந்து கட்டடத் தொழிலாளிகளையும் அழைத்து வந்தோம். இந்த வீட்டுச் சுவர்களின் உட்பகுதி மற்றும் வெளிப்பகுதி என இரு புறங்களிலும், முற்றிலுமாக சிமெண்ட் பூச்சு கிடையாது. பெட் ரூம்களில் தரை முழுவதும் சிவப்பு நிற டெரகோட்டா கற்கள் பதித்துள்ளோம். இதனால் உஷ்ணம் சற்று குறைவாகவே இருக்கும். இந்த வீட்டின் கட்டுமானச் செலவு, மற்ற வீடுகளுக்கு ஆகும் செலவைவிடப் பதினைந்து சதவிகிதம் குறைவு. வெள்ளையடிக்கவோ, பெயிண்ட் தீட்டவோ வேண்டியதில்லை. சுற்றுச் சூழலைப் பாதிக்காத கட்டுமானம். மிகக் குறைந்த மின் சக்தி பயன்பாடு. கலை நேர்த்தி. கழிவு நீரை மறு உபயோகித்தல். மழை நீர் சேமிப்பு மற்றும் சுற்றுப்புற பசுமை போன்ற விதிகளை உள்ளடக்கிய 'சுற்றுச் சூழலுக்கு உகந்த இல்லம்' விருதுக்கு, கோவை மாநகரில் 46 வீடுகள் விண்ணப்பித்திருந்தன. அவற்றைப் பார்வையிட்டு, எங்கள் வீட்டையே 'சுற்றுச் சூழலுக்கு உகந்த இல்லம்!' எனத் தேர்வு செய்து விருது தந்துள்ளனர்'' என்கிறார் கோபி கிருஷ்ணா. வீடு பேறு என்பது இதுதானோ!

- செய்திச் சித்திரம் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

நடிக்கத் தெரிந்த ஜிலீர் பட்டாசு நடிகை சந்தியா. அவரது பர்ஃபாமன்ஸ் பற்றி என்ன சொல்கின்றனர் டெக்னீஷியன்ஸ்...

# 'சந்தியா'!

**இயக்குநர் அதியமான்:** நான் இயக்கிய 'தூண்டில்' படத்தில் கதாநாயகியாக நடிக்கும்போதுதான் அறிமுகமானார் சந்தியா. முதல் அறிமுகத்திலே நடிப்பால் என்னை ஈர்த்தவர். 'தூண்டில்' படத்தின் கதையைக் கேட்கும்போதே எனக்குப் புரிந்துவிட்டது. சந்தியா இயக்குநர்களுக்கு ஏற்ற கதாநாயகி. அவரை எந்தக் கதாபாத்திரத்துக்கு வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். அதற்கான திறமை அவரிடம் உண்டு. எனது அசோஸியேட் இயக்கத்தில் வெளிவரும் 'மஞ்சள் வெயில்' படத்தில் ஒரு பாடலும் பாடியிருக்கிறார்.

**நடிகர் பரத்:** 'காதல்' படத்தில் சந்தியா கூட நடித்தது இனிமையான அனுபவம். கொஞ்சம் அசந்தால்கூட, தம் நடிப்பால் உடன் நடிப்பவர்களை மிஞ்சிவிடுவார். என்ன தேவையோ அந்த அளவுக்கு இயல்பாக நடிப்பவர்.

**ஒளிப்பதிவாளர் ஆனந்த கண்ணன்:** காமராவுக்கு ஏற்ற ஃபோட்டோ ஜெனிக் ஃபேஸ் கொண்டவர் சந்தியா. எந்த ஆங்கிளிலும் அழகாகத் தெரிவார். குறிப்பாக, க்ளோஸ்-அப் ஷாட்களில் அவரது கண்கள் பவர்ஃபுல்லாக இருக்கும்! அவரது காட்சிகளை ஷூட் செய்துவிட்டு, திரும்பப் பார்க்கும்போது நாம் எதிர்பார்த்தது போலவே வந்திருக்கும்.

**ரஃபி (ரசிகர்):** சந்தியாவை நேரில் பார்த்தாலும் திரையில் பார்த்தாலும் எந்த வித்தியாசமும் தெரியாது. சட்டென்று நட்புகொள்ளத் தூண்டும் தோற்றம் கொண்டவர். அவர் முகத்தில் எப்போதும் கொப்பளித்துக்கொண்டிருக்கும் குறும்பும், குழந்தைத்தனமுமே என்னை ரசிகனாக மாற்றியது!

– மதுமிதா



# மதில்மேல் மனசு!

செல்வத்துக்குச் சட்டெனக் காதல் வந்துவிட்டது. எனக்குத் தெரிய வந்தபோது நான் அதிர்ந்துபோனேன்.

''தெரியாதா சார். உங்க பெஸ்ட் ஃப்ரெண்டாச்சே... சொல்லலியா...?''- பன்னீரின் பேச்சில் எள்ளல் இருந்தது!

ஆனந்தியும் குழந்தைகளும் ஞாபகம் வந்தனர். செக்கச்செவேல் என அமெரிக்கையான அழகு ஒளிரும் மூத்தவள். அப்புறம் இரண்டும் பையன்கள். இவர்களை விட்டுவிட்டுக் காதலா? அதுவும் 35 வயதுக்கு மேல்?

''பன்னீர்... உளறாதப்பா...''

''நான் ஏன் சார் உளர்றேன். இப்ப காலேஜ் விடற நேரம். அங்கதான் போயிருக்கறாரு''

''நீ பாத்திருக்கியா அந்தப் பொண்ண?''

''நல்லா தெரியும் சார். சௌகார்பேட் பொண்ணு... பூர்ணிமான்னு பேரு.''

என் அவநம்பிக்கை கழன்றுகொள்ளத் தொடங்கிவிட்டது.

ஒவ்வொரு இரண்டு வருடத்துக்குள்ளும் ஏதாவது ஒரு வலியைக் கொண்டு வராமல் அவன் இருந்ததில்லை. இந்த முறை காதல்; சென்ற முறை சாமியார்.

**நா**ன்கு நாட்கள், அலுவலகத்துக்குத் தொடர்ச்சியாக செல்வம் வரவில்லை. தொலைபேசியுமில்லை; தகவலுமில்லை. என்னவென்று விசாரிக்கப் போனபோதுதான் அந்தக் கிறுக்குத்தனம் அரங்கேறியிருந்தது.

செல்வத்தின் அம்மா தாங்கமாட்டாமல் பொருமினாள்

''கொஞ்சம் எடுத்துச் சொல்லக்கூடாதா தம்பி? இப்படிப் பண்ணியிருக்கிறானே... ஊரெல்லாம் பிள்ளக்குட்டியோட அவனவன் என்னமா வாழறான். இவனுக்கு இப்படிப் புத்தி போகுதே... யாரோ சாமியார் கூப்பிட்டாருன்னு எங்களையெல்லாம் விட்டுட்டு, காஷாயம் மாட்டிக்கிட்டு நிக்கறானே.''

ஒரு தருணத்துக்கு மேல் தாங்கமாட்டாமல், குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கிவிட்டார்.

அடுத்த நாள் செல்வம் இருக்கும் ஆசிரமத்துக்குப் போனேன். சென்னைப் புறநகரில் புதியதாய்த் தோன்றியுள்ள சின்னப் பேட்டை.



யாரோ முதியவர் என்னை உட்காரச் சொன்னார். நிற்கக் கூடாதாம். எளிமை என்ற பெயரில் அபரிமிதங்கள் மூடிமறைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. செல்வச் செழிப்புக்குக் குறைவில்லை. சாமியாரின் குரலும் கருத்துகளும் நிறைய பேர்களைக் கட்டிப்போட்டிருந்தது.

ஒன்று மட்டும் புரிந்தது. யாரும் சிந்திக்கத் தயாரில்லை. அல்லது சிந்திப்பதை, சாமியார்களின் தனியுடைமை ஆக்கிவிட்டிருக்கிறார்கள்.

சிறிது நேரத்தில், அமர்ந்திருந்த அனைவருக்கும் தொன்னையில் பிரசாதம் பரிமாறினார்கள். என் அருகே வரும்போது செல்வம் தென்பட்டான். முகத்தில் வியப்பு; கேள்விக்குறி; சின்ன பயம்.

''உங்கிட்டே பேசணும்...''- இது நான்.

''முடியாது... வேலை இருக்கு... என்ன விஷயம் சொல்லு.''

''இது என்னடா வேஷம்''

''ஷட் அப். என்னைத் திருப்பிக் கூட்டிட்டுப் போக வந்தியா?''

''இல்ல. நியாயம் கேக்க வந்தேன்.''

சட்டென ஒரு கணம் நான் ஏன் இங்கே வந்தேன் என்ற எண்ணம்கூட குறுக்கிட்

**ஆர். வெங்கடேஷ்**

டது. இது அவன் இஷ்டம்; அவன் வாழ்க்கை. சாமியாரோ... சம்சாரியோ? எனக்கு என்ன வந்தது.

அக்கறை என்ற போர்வையில் சமூக போலீஸாக மாற முடியுமா என்ன? அதே சமயம், கண்ணெதிரில் ஒரு பைத்தியக் காரத்தனம் அரங்கேறும்போது, வெறுமனே இருக்க முடியுமா? கேள்வி கேட்பது இயல்புதானே. செல்வம், சட்டெனக் கூட் டத்துக்குள் நுழைந்து மறைந்து போனான்.

**தொ**லைபேசி அலறியது. மனைவி சந்தியாதான் எடுத்தாள். எதிர்முனையில் ஆனந்தி. பதற்றம்; தவிப்பு; இயலாமை. செல்வத்தைக் காணவில்லை.

அடுத்த முக்கால் மணிநேரத்தில் அவன் வீடு போய்ச் சேர்ந்தபோது, அபாயமான இறுக்கம்; கன்னங்கரேலென இரவு. குழந் தைகள் நின்றுகொண்டிருந்தனர். ஆறுதல் படுத்த முடியாமல் ஆனந்தி. அலுவலகத் தைச் சேர்ந்த வேறு சிலரும் நின்றிருந்தனர். ஆனந்தி, தனக்குத் தெரிந்த அத்தனை பேரையும் கூப்பிட்டிருக்கிறாள். பன்னீரும் அதில் அடக்கம். யாருக்கும் எதுவும் பிடி படவில்லை. என்ன ஆகியிருக்கும்?

காலை அலுவலகம் போன செல்வம் திரும்பவில்லை.

ஒருவிதமான குழப்பம். என்ன ஆகியிருக்கும் என்ற தெளிவின்மை தந்த குழப்பம். ஏதேனும் விபத்தா? இல்லை ஏதாவது அவசர வேலையாகச் சொல்லிக் கொள்ள முடியாமல் வெளியூர் போயிருக் கிறானா? அதைவிட, அனைவர் மனத்திலும் எழுந்து நின்ற கேள்வி, செல்வத்தின் பைத்தியக்காரத்தனம் பற்றி யது. ஆனால், அதைத் தைரியமாக வெளியே பேச யாரும் விரும்பவில்லை.

ஃப்ளாட்டை விட்டு கீழே இறங்கி வந்தேன்.

நான் வருவதைக் கண்டு, மெல்ல என்னருகே வந்தான் பன்னீர். வாசல் கேட் திறந்து, வெளியே அடுத்த ஃப்ளாட்டின் ஓரமாக என்னை அழைத்துக்கொண்டு போனான்.

"பூர்ணிமா வீட்டுக்குப் போய்ப் பார்ப்

"இப்போதெல்லாம் விஜயகாந்தை அடிக்கடி வங்கி பக்கம் பார்க்க முடிகிறது. ஏன்? ஆட்சிக்கு வந்ததும் எவ்வாறெல்லாம் கடன்களைத் தள்ளுபடி செய்யலாம் என்று ஆலோசனை செய்கிறாரா? இல்லை. பிறகு? 'எங்கள் ஆசான்' படத்தில் வங்கி மேனேஜராக நடிக்கிறார். அதற்காக வங்கியின் நடைமுறைகளைத் தெரிந்துகொள்வதற்காக அடிக்கடி நடக்கிறது வங்கி விசிட்! தன் சொந்த லாபத்துக்காக வங்கியை ஏமாற்றும் ஒரு 'பெரிய' மனிதனை மக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டும் கேரக்டர்! வங்கியின் அலட்சியப்போக்கால் பாதிக்கப்படும் ஏழைகளின் நிலையும் படம்பிடிக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் வெளிவந்திருக் கும் படங்களின் சமூகப் பிரச்னையை அதிகளவில் அலசும் படம் தான் 'எங்கள் ஆசான்' "என்கிறார் இயக்குநர் எஸ்.வி. தங்கதுரை.


வங்கியில் விஜயகாந்த்!

போமா சார்?''

''இல்லை. வேறெதோ ஆயிருக்கு பன்னீர். இருங்க பார்ப்போம்.''

பன்னீர்தான் கண்டுபிடித்தான். பூர்ணிமாவும் வீட்டில் இல்லை. இருவரும் புதுக்குடித்தனம் போகக் கிளம்பிவிட்டார்கள்.

**செ**ய்தி அலுவலகத்துக்கு வந்துவிட்டது. அவர் பூர்ணிமாவின் அப்பாவாக இருக்கவேண்டும். நல்ல உடை உடுத்தி, கண்ணில் தூக்கம் மிச்சமிருக்க, தவித்தபடி ஒவ்வொரு மேலாளர் அறையாகப் போய் வந்தார்.

கிட்டத்தட்ட மதியத்துக்கு மேல் அவர்கள் எல்லோரும் கிளம்பினார்கள். எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. பர்சானல் மேலாளர் கொஞ்சம் புத்திசாலி. அவர்கள் மொழியிலேயே பேசி, செல்வம் அலுவலகம் வந்தால், கண்டிப்பாக விவரம் தெரிவிக்கிறேன் என்று சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார். அவர்கள் அந்தப் பக்கம் கிளம்பினார்களோ இல்லையோ, இங்கே எல்லோரிடமும் அதீதமான பொய்கள். சமூகமே இவர்கள் தலையில்தான் நடப்பது போல், ஒவ்வொருவரும் நியாயத்தையும் அறத்தையும் ஒழுங்கையும் பற்றிப் பேசத் தொடங்கினார்கள். செல்வம் மனைவியின் போதாமைப் பற்றிக் கிசுகிசுத்த வர்கள் கூடவே அவளுக்காக 'அய்யோ பாவம்' சொன்னார்கள்.

உண்மையில் பரிதாபப்பட்டவர் எங்கள் துறையின் மேலாளர் மூர்த்திதான். அமைதியான, அன்பான மனிதர்.

''இப்படிப் பண்ணித் தொலைச்சுட்டானேப்பா, அவன் ஒய்ஃப் என்னப்பா பண்ணறா? எங்கேயாவது வேலை செய்யறாளா?''

''இல்ல சார்''

''வருமானம்?''

''செல்வம் சம்பாத்தியம்தான். அவன் அப்பாவுக்குப் பென்ஷன் வருது. வீடு சொந்தமானது. வாடகை பிரச்சினையில்லை.''

**பூ**ர்ணிமாவின் குடும்பம், செல்வம் வீட்டைக் கண்டுபிடித்துப் போய்ப் பார்த்து, பேசி, மிரட்டிவிட்டும் வந்துவிட்டது. செல்வம் எங்கே போனான் என்றுதான் தெரியவில்லை.

ஆனந்தியும், செல்வம் பெற்றோரும் குழந்தைகளும் அனுபவித்திருக்கக்கூடிய மன உளைச்சல் மிக அதிகமாகவே இருந்திருக்கும். இந்த நிலையில் நான் போய்ப் பேசுவது, எந்த வகையிலும் உதவப் போவதில்லை. சந்தியாவும் அதையே சொன்னாள். என்ன பேசுவது? ஆறுதல் சொல்ல முடியுமா என்ன? என்னவென்று ஆறுதல் சொல்ல முடியும்?

இப்போது, செல்வத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமா... வேண்டாமா? இதில் கண்டுபிடிப்பது என்ன வேண்டிக்கிடக்கிறது? அவன் குழந்தையா என்ன? எல்லாம் தெரிந்தவன். தெரியாமலா இதைச் செய்திருப்பான்.

அப்படியே அவனைக் கண்டுபிடித்துவிட்டாலும், என்ன சொல்வான்? திரும்ப வருவானா? வந்து என்ன செய்ய முடியும்?




*''ஒழுங்கா படிச்சு பாஸ் பண்ற வழியைப் பாரு... இல்லேன்னா நடு ரோட்ல தான் நிப்ப...''*

*''அப்படின்னா ட்ராபிக் போலீஸ்காரங்க சரியாகவே படிக்கலியாப்பா?''*

**- 'இனாம்' ச.ஆ.கேசவன்**



## செல்வத்தின் அம்மா ஒரு கணத்துக்கு மேல் தாங்க முடியாமல் குலுங்கி குலுங்கி அழுதுவிட்டாள்!

ஆனந்தியும் குழந்தைகளும் மீண்டும், பழைய சௌஜன்யத்தோடு ஏற்றுக்கொள்வார்களா?

இந்த மொத்த விஷயத்தில் மனத்தை உறுத்திய ஒன்றே ஒன்று, ஆனந்தியின் நிலை. தவறு செய்தது செல்வம். ஆனால், மறைமுகமாகவேனும் குறைசொல்லப் பட்டது ஆனந்திமேல்தான். அவளுக்குச் சாமர்த்தியம் போதவில்லை என்பது தொடங்கி, அந்தரங்க வாழ்வு வரை அவளை மேஜை மேல் குறுக்கே வெட்டிப் பார்க்காத குறைதான்.

**ச**ந்தியா, இரண்டு மூன்று முறை போய்ப் பார்த்துவிட்டு வந்ததாகச் சொன்னாள். ஒவ்வொரு முறையும் அவர்கள் வீட்டுக்குப் போய்விட்டு வரும்போதும், ஏதேனும் பொருட்கள் காணாமல் போயிருப்பதாகச் சொல்வாள்.

அலுவலகத்தில், ஒரு மாதிரி பேச்சுகள் அடங்கிப் போயின. எங்கள் துறை மேலாளர் மூர்த்தியின் முயற்சியால் ஒரு சின்ன வேலையை, ஆனந்திக்கு ஏற்படுத்தித் தருவது என்று முடிவாயிற்று. பெரிய நிறுவனத்தின் பார்வையில், செல்வம் ஒரு பொருட்டே இல்லை. எதுவும் செய்திருக்கவேண்டிய அவசியமுமில்லை.

மூர்த்தியின் முயற்சிதான் அது. அல்லது, அவ்வப்போது, நான் சொல்லும் தகவல்களை ஒட்டி, ஒரு குடும்பம் வீணாகிப் போய்விடக்கூடாது என்ற நல்லெண்ணமும் அதற்குக் காரணமாக இருக்கலாம். அன்று மாலை ஆனந்தியைப் பார்த்து, அடுத்த வாரத்தில் ஒரு நாள் தனது சர்ட்டிஃபிகேட்டுகளோடு, அலுவலகம் வரச் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். மூர்த்தி, பர்சானல் துறையோடு ஒரு நேர்காணலுக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

அலுவலகம் முடிந்து மாலை நேரமாகி விட்டது. இலேசாக மழை பிடித்துக் கொள்ள, ஆட்டோ பிடித்து நேராக வீடு வந்து சேரவே சரியாக இருந்தது.

**வி**டிகாலை தொலைபேசி மணி ஒலித்தது. சந்தியாதான் எடுத்தாள். நம்ப முடியாமல், இரண்டு மூன்று 'அப்படியா'க்கள் வந்து விழுந்தவண்ணம் இருந்தன. நான் என்னவென்று புரியாமல், சந்தியாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தேன்.

''ஆனந்தி, ஓடிப்போயிட்டாளாங்க. என்ன ஒரு கல்மனசு, குழந்தைகளையெல்லாம் அப்படியே விட்டுட்டு... செல்வத்தோட அப்பா லைன்ல இருக்கார். பேசறீங்களா?''

நான் பேச வார்த்தையற்று நின்றேன். செல்வத்தின் முடிவு பற்றிப் பேச முடியாதவர்கள், ஆனந்தியை இனி பெரிதாகக் குற்றம் சொல்லப்போகிறார்கள். வஞ்சிக்கப்பட்ட வலியுடன் விமர்சனக் கணைகளையும் தாங்கியவள்! இனி விழப்போகும் சொல் தோட்டாக்கள் அவளைத் துரத்த முடியாமல் விழுந்து போகும்.

ஏனோ, செல்வத்தின் மூத்த பெண்ணின் வெறுமை முகம் மட்டும் மீண்டும் மீண்டும் ஞாபகத்தில் வந்துகொண்டே இருந்தது.

# இரண்டு லதாக்கள்

யுகபாரதி

பிரேமலதா
தன் காதலை அவனிடம்
சொல்லிவிடப் போகையில்
இன்னொருத்தியோடு
பேசிக்கொண்டிருந்தான்

பிரேமலதா துயரக்கதவைத்
தட்டத் தொடங்கிவிட்டாள்
தன்னை முந்திவிட்ட
அப்பெண்ணைச்
சபிக்கவும் தவறவில்லை

இன்னொருத்தியோடு
நின்றுகொண்டிருந்த
அவனுக்கும்
பிரேமலதாவைப்
பிடிக்காமலில்லை

புதிதாய்க் கிடைத்தவளை
பிரேமலதாவாக நினைத்துத்
தொடர்கிறான் ப்ரியங்களை

காதலைச் சொல்லிவிட்ட
ஒருத்தியை
பிரேமலதாவாகக் கருதுவது
அவனுக்குச்
சிரமமேற்படுத்தவில்லை

ஒருவனுக்கு பிரேமலதாவை
உவந்து ஸ்நேகிக்க
முடியும்போது
ஏன் ஒரு பிரேமலதாவுக்கு
இன்னொரு பிரேமலதாவைப்
பிடிப்பதில்லை?



# குளு குளு குட்டி

* அதிரபள்ளி நீர்விழ்ச்சி

இந்த வருஷம் காலேஜ் டூருக்கு லொகேஷன் கிடைச்சாச்சு!

# நயாகரா...



கோவை நீர்வீழ்ச்சி

சில்லென ஒரு சுற்றுலா

## அசத்தும் அதிரபள்ளி

**சா**லக்குடி கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மழைக்காடுகளின் வழியாக ஓடிவருகின்ற சாலக்குடி நதியில் குளியல் போட்டால், கத்திரிவெயில் என்ற சங்கதியின் மீதே உங்களுக்குச் சந்தேகம் ஏற்படும். அந்த அளவுக்குக் குளிர்ச்சியின் உறைவிடம். கிட்டத்தட்ட எண்பது வகை மீன்கள் இந்தச் சாலக்குடி நதியில் சங்கமித்திருக்கின்றன. குளியல் போடும்போது கண்ணுக்கெட்டிய தூரத்தில் கண் சிமிட்டிக்கொண்டு நீந்துகின்றன இந்த மீன்கள்.

### டாப் ஆங்கிள் அழகு

**இ**ந்தச் சாலக்குடி நதிநீர் கடலில் சங்கமிப்பதற்கு முன்னர் திடீரென எண்பதடி உயரத்திலிருந்து செங்குத்தாக ஆர்ப்பரித்தபடி விழுகிறது. இந்த அருவியின் பெயர், அதிரபள்ளி. குட்டி நயாகரா என்றும் செல்லமாக அழைக்கப்படுகிறது. அருவி நீரில் கண்கள் சிவக்கக் குளித்துக் கும்மாளம் அடித்து முடித்தவர்கள், அருகில் இருக்கும் ஒற்றையடிப் பாதையின் வழியே மேல் நோக்கி நடந்தால், அருவி கொட்டும் அழகை டாப் ஆங்கிளில் இருந்து பார்த்து ரசிக்கலாம்.

சாலக்குடி நதிக்கு அருகிலும் சரி, அதிரபள்ளி அருவிக்கு அருகிலும் சரி, ஏகப்பட்ட சொகுசு நிறைந்த ரிஸார்ட்டுகள் இருக்கின்றன. உள்ளுக்குள் இருந்தபடியே சலசலத்து ஓடும் நதியின் ரீங்காரத்தை ரசிக்கமுடியும்.




## மூலிகை பிராந்தியம்

**வ**ழிநெடுகத் தென்படும் வனப்பகுதியில் மலை வேம்பு, மாராணி கிரை, கிவலை போன்ற மரங்களிலிருந்து வெளிவரும் சிலீர் மூலிகைக் காற்றைச் சுவாசிக்கும் போது, உங்களுடைய களைப்பு நீங்கி ஓர் இனம்புரியாத பரவசம் உருவாகும். முன்தொடரி, கீழாநெல்லி, அலுவாணி, ஆனைவணங்கி, ராஜவட்டம், கடுக்காய், ராஜவணங்கி, ஜாதிக்காய் உள்ளிட்ட மூலிகைப் பொருட்கள் அருவி நீரோடு இரண்டறக் கலந்து வருவதால், குளிர்ச்சியைத்தாண்டிய ஒரு சுகத்தை அனுபவிக்க முடியும்.

## அழகுத் தோட்டம்

**அ**திரபள்ளியில் குளித்து முடித்து, அதன் அத்தனை அம்சங்களையும் அணு அணுவாக ரசித்தபிறகும், இயற்கை அழகை ரசிக்க ஆவல் கொள்பவர்களுக்கு நல்ல விருந்து கொடுத்து உபசரிக்கிறது, கேரள அரசின் கைவண்ணத்தில் உருவான இயற்கைத் தோட்டம்.

## எப்படிச் செல்லலாம்?

**வா**ல்பாறையில் இருந்து நாற்பது கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது அதிரபள்ளி.

# கோவை குற்றாலம்

**ம**யக்க வைக்கும் மூலிகைக்காற்று. கண்ணைக் குளிரூட்டும் பசுமைக்காடு. சரசரக்கும் சறுக்குப்பாறை. அசர வைக்கும் அருவிகள். கோவை குற்றாலத்தின் அங்க அடையாளங்கள் இவை. கோவையில் இருந்து சாடிவயல் செக்போஸ்டுக்குச் சென்று, அங்கிருந்து வெறும் இரண்டு கிலோமீட்டர் பயணம் செய்தால், நீர் வீழ்ச்சியின் பரவசமூட்டும் ஒலி உங்களுடைய காதுகளை வருடத் தொடங்கும்.

## கட்டணம் பலவிதம்

**கோ**வை குற்றாலத்துக்குள் செல்ல வேண்டும் என்றால் பெரியவர்களுக்குப் பதினைந்து ரூபாய். சிறியவர்களுக்குப் பத்து ரூபாய். இயற்கை எழிலை ஹேண்டி காமரா மூலம் படம்பிடிக்க வேண்டும் என்றால், நூற்றைம்பது ரூபாய் கட்ட வேண்டும். வெறும் புகைப்படக் காமரா என்றால் இருபத்தைந்து ரூபாய் கட்டினால் போதும்.

## குற்றாலத்தில் தடா!

**இ**யற்கையை எப்படி வேண்டுமானாலும் ரசிக்கலாம்; அனுபவிக்கலாம். ஆனால் பீடி, சிகரெட், மதுபானம், தீப்பெட்டி, பிளாஸ்டிக் பொருட்கள் போன்ற வஸ்துக்களை அங்கே எடுத்துச் செல்லவே கூடாது.

## எப்படிப் போவது?

**கோ**வை பேருந்து நிலையத்தில் பேருந்துகள் தயாராக நின்றுகொண்டிருக்கும். இருபது ரூபாய் டிக்கெட் வாங்கிவிட்டால், அலுங்காமல் குலுங்காமல் கொண்டு போய் கோவைக் குற்றாலத்தில் இறக்கி விட்டுவிடுவார்கள். திரும்பி வரும்வரையில் மனமெங்கும் சந்தோஷ அருவிதான்!

– கலை

# அருள்வாக்கு



# யோகம்

பைத்தியங்கள் என்று சிலரைக் குறிப்பிட்டு அவர்கள் சித்த சுவாதீனம் இல்லாதவர்கள் என்கிறோமே, உண்மையில் நம்மில் யாருக்குமே சித்த சுவாதீனம் இல்லைதான். பைத்தியம் வாயை அடைக்காமல் பிதற்றிக்கொண்டே இருக்கிற தென்றால், நாமும் மனத்தை அடக்காமல் பிதற்றிக் கொண்டுதான் இருக்கிறோம்!

நமக்குச் சித்தஸ்வாதீனம் வந்துவிட்டால் எப்படியிருக்கும் தெரியுமா? எத்தனை வலி ஏற்பட்டாலும், 'வலி என்று நினைக்காதே' என்றால் மனம் வலியைப் பொருட்படுத்தாமல் இருந்துவிடும். எதிரிலே புலி வந்து உறுமினால்கூட மனத்திடம், 'பயப்படாதே' என்றால் அது பயப்படாமலே இருக்கும். இப்போது நாம் காரணமில்லாமலே அழுதுகொண்டிருக்கிறோம். மனசு வசப்பட்டுவிட்டாலோ, அழுகைக்குக் காரணமாக, எத்தனை துக்கம் வந்தாலும்கூட அது சிரித்துக் கொண்டிருக்கும். ஆத்திரமூட்டும்படி என்ன நடந்தாலும் அது கோபமே இல்லாமல் சாந்தமாய் இருக்கும்.

முதலில் மனசை இப்படி அப்படிப் போகாமல், நல்ல விஷயத்தில் நினைவைச் செலுத்தும்படிச் செய்ய வேண்டும். எண்ணெயை விட்டால், அது எப்படிப் பிசிர் இல்லாமல் ஒரே இழையாக விழுகிறதோ, அது மாதிரி மனம் நல்ல நினைவில் ஒருமுகப்பட்டுச் செல்லவேண்டும். 'ஸ்வாமி', 'ஸ்வாமி' என்ற நல்ல வஸ்துவை நினைத்துக்கொண்டிருக்கும்படி மனத்தை அப்பியாசப்படுத்த வேண்டும். அதன்பிறகு, 'நினைக்கிறோம்' என்பதும் போய், ஸ்வாமியிலேயே கரைந்து ஸ்வாமியாகவே ஆகிவிடுவோம்.

இப்படி மனசை அடக்குவதற்குப் பெயர்தான் 'யோகம்'.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

கூலா சாப்பிடுங்க!

# இப்படிக்கு, சைவம்!

இந்த அத்தியாயத்தை ஓர் உண்மைக் கதையிலிருந்து ஆரம்பிக்கலாமே. கிராமத்திலிருந்து நகரத்துக்குத் திசைமாறிய ஒரு குடும்பத்தின் கதை.

அந்தப் பெண்மணி இடிந்துபோய்விட்டார். கணவருக்கு, இரண்டாம் முறையாக மாரடைப்பு என்றால் அதிர்ச்சி ஏற்படுவது இயற்கைதான். ஆனால், அதிர்ச்சி அதனால் மட்டும் அல்ல. அது பல அதிர்ச்சிகளின் சங்கமம்!

அவர்களுக்கு நான்கு குழந்தைகள். அவர்களில் இருவர், இளம் வயதிலேயே இறந்துவிட்டார்கள். மிஞ்சியவர்களில், மகனுக்கு இளம்வயதிலேயே ஒரு முறை மாரடைப்பு வந்துவிட்டது. மகள் இதய நோயால் பாதிக்கப்பட்டிருந்தாள்.

இத்தனைக்கும் காரணம், அந்த அம்மாளின் அதீதமான அன்புதான்.

“டாக்டர், நாங்க கிராமத்துக்காரங்க. அந்த 'நந்தன' வருஷப் பஞ்சத்தை எங்களாலே மறக்கவே முடியாது. ரேஷன் அரிசிதான். வேலை தேடி என் புருஷன் வெளியூருக்குப் போயிட்டார். குழந்தைகளோடு நான் கிராமத்திலேயே இருந்தேன். கையிலே காசு இல்லை; வீட்டிலே குழந்தைகளுக்குச் சரியாக சாப்பாடு போட முடியலை. பரங்கி இலையை அவிச்சு உணவாகப் போட வேண்டிய கட்டாயமெல்லாம் ஏற்பட்டது. கணவருக்குக் கொஞ்சம் நல்ல வேலை கிடைத்தவுடனேயே, மாதா மாதம் அத்தனை பணத்தையுமே சாப்பாட்டுக்குதான் செலவு செய்தேன். தினமும் அரிசிச் சாதம், காய்கறி, நெய் தவிர, இறைச்சியும் உண்டு. 'கவிச்சி வாடை இல்லேன்னா சாப்பாடு இறங்காது'ன்னு குழந்தைங்க சொல்லுவாங்க. கறி, மீன் எல்லாம் கிலோ கணக்கில்தான் வாங்குவேன்.”

ஆக, பட்டினியில் கிடந்த குடும்பம். நன்கு பசி ஆற வேண்டும் என்கிற ஆதங்கத்தில், அந்த அம்மாள் தம்மையும் அறியாமல் மிகப்பெரிய பாதகத்தைத் தம் குடும்பத்துக்குச் செய்திருக்கிறார். நாக்குக்கு அடிமையாகி, வஞ்சனையின்றி கொலஸ்ட்ராலை ஏற்றிக்கொண்ட அவர்கள், அடுத்த வேளை உணவு ஐட்டம் என்ன என்பதில் காட்டிய அக்கறையை, ஒரு துளியும் உடற்பயிற்சியில் காட்டவில்லை. விளைவு? இதய நோய்கள்; மாரடைப்பு.



## நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 9

# டாக்டர் எம்.ராஜேந்திரன்

பொதுவாக அசைவ உணவைக் குறைத்துக்கொள்வது - முடிந்தால், தவிர்த்து விடுவதும் நல்லது. உலக சுகாதார நிறுவனம் அசைவ உணவின் மூலமாக மனிதர்களுக்கு 159 வகை நோய்கள் பரவுகின்றன என்று கூறுகிறது.

அசைவ உணவில் சத்து அதிகம்; சக்தி அதிகம் என்று சொல்பவர்கள் உண்டு. அவர்களுக்காக இதோ சில புள்ளி விவரங்கள் :

| சத்துக்கள் | சோயாபீன்ஸ் | தானியங்கள் | முட்டை | பருப்பு | இறைச்சி |
|---|---|---|---|---|---|
| புரதம் | 43.2 | 22 | 13 | 25 | 18 |
| மாவுச்சத்து | 23 | 56 | 0 | 60 | 0 |
| இரும்பு | 12 | 10 | 2 | 10 | 25 |
| கலோரி | 432 | 350 | 173 | 350 | 194 |
| அனைத்தும் சதவிகிதத்தில் | | | | | |

சைவ உணவில் உள்ள எண்ணெய்ப் பசை மிகவும் மெலிதானது. இதை லினோலிக் அமிலம் என்பார்கள். இது உடலுக்குத் தேவையானது. வைட்டமின் சத்தும் சைவ உணவில்தான் அதிகம் காணப்படுகிறது.

இறைச்சி வகைகளிலோ, மிக அதிக அளவு கொலஸ்ட்ரால் உள்ளது. இதன் காரணமாக இதய பாதிப்பு நேரக் கூடும்.

அது மட்டுமல்ல, உணவுக் குழாய் மற்றும் கன்னப் பகுதிகளில் நாளடைவில் புற்றுநோய் உண்டாகவும் இறைச்சி வழிவகுக்கிறது.

புரதத்தில்கூட முதல் வகை புரதம், இரண்டாவது வகை புரதம் என்று உண்டு. இவற்றில் சோயாவில் உள்ளது முதல்வகை புரதம். இறைச்சியில் உள்ளது இரண்டாவது வகை புரதம்.

எதற்கு வம்பு? அசைவக்காரர்கள் சைவத்துக்கு மாறிவிடுவதுதான் புத்திசாலித்தனம்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**





# சக்தி மிகு ஸ்தல

த.கி.நீலகண்டன்

டி.கே.சி.யிடம் ஓர் ஆங்கிலேயர் பேசிக்கொண்டிருக்கும்போது, 'நாங்கள் மரங்களை நேசிப்பவர்கள்' என்ற பெருமையடித்துக் கொண்டாராம்! பதிலுக்கு டி.கே.சி. அவர்கள் 'அப்படியா! நாங்கள் மரங்களை நேசிப்பது மட்டுமில்லை. பூசிக்கவே செய்கிறோம்' என்று மடக்கிவிட்டாராம்! ஒவ்வொரு மரத்துக்கும் உள்ளே இருக்கும் ரசாயன விந்தைகள், இன்ஜினீயரிங் ஜாலங்கள், சிற்ப மர்மங்கள், அவற்றின் அதீதமான ஞாபக சக்தி, உயிர்த் தத்துவம் இவற்றைக் கண்டு அதிசயித்த நம் முன்னோர்கள், 'அடடா! மரத்துக்குள் அல்லவா இறைவன் இருந்து தொழிற்படுகிறார்' என்பதைக் கண்டு கொண்டார்கள். ஆகவே, நம்முடைய புராதன ஆலயங்கள் ஒவ்வொன்றிலும், ஒவ்வொரு மரம் முக்கியமாக விளங்கி வருகிறது. ஸ்தல விருட்சங்கள் என்று அவை பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றன. சிலவற்றின் காலக் கணக்கு வருஷங்களில் இல்லை; யுகங்களில் சொல்லப்படுகிறது!

மதுரை, சிதம்பரம், காஞ்சிபுரம்,



திருநெல்வேலி ஆகிய பெரும் தலங்கள் ஒரு காலத்தில் வனங்களாக இருந்தவைதாம். கோயில்கள், பிரபலமடைந்து அதைச் சுற்றியுள்ள நகரங்கள் வளர்ந்தபோது, மரங்களின் அடர்த்தி குறைந்து, பெயருக்கு ஒரு மரமேனும் இன்றளவும் பாதுகாக்கப்படுகிறது.

பரந்த பாரத பூமியில் தண்டகாரண்யம், சம்பகாரண்யம், விந்தியாரண்யம், வீக்ஷாரண்யம், வேதாரண்யம், நைமிசாரண்யம் என்று பல அரண்யங்கள் (காடுகள்) புண்ய பூமிகளாகப் போற்றப்பெற்று வந்திருக்கின்றன. அரண்யம் என்று பெயருள்ள ஊர்களும், காடு என்ற பெயருள்ள ஊர்களும், கா(சோலை) என்ற பெயர் உள்ள ஊர்களும் தென்னாட்டில் ஏராளம்! பஞ்ச பூத ஸ்தலங்கள்போல், பஞ்சாரண்ய ஸ்தலங்களும் தமிழ்நாட்டில் உண்டு. திருக்கருகாவூர் முல்லைவனம்; அரித்துவாரமங்கலம் வன்னிவனம்; அவளிவநல்லூர் பாதிரி வனம்; திருகொள்ளம்பூதூர் வில்வவனம் திருஇரும்பூளை - பூளை வனம். பூளை என்பது ஒரு வகைச் செடிதான்; மரமல்ல! விதை வெடித்து பஞ்சு போல வெளிப்பட்டு காற்றில் மிதந்து வருமே, அதுதான் பூளை! இப்படி ஒரு சாதாரணமான செடி வகைக்குக்கூட புனிதக்

# விருட்சங்கள்!





தன்மை உண்டு.

இன்று பலவகை மரங்கள் அழிந்து வருகின்றன. நம்மில் பலர் அந்த மரங்களைப் பார்த்ததுக்கூடக் கிடையாது. தேவதாரு, ஆத்தி, குருந்தம், பாதிரி, மருதம், களா ஆகியவற்றைப் பெயரளவிலேதான் நாம் அறிவோம். அழிஞ்சில் என்று ஒரு வகை மரம் உண்டு. இதன் அதிசயத் தன்மையை காஞ்சி மாமுனிவரே வியந்து பேசியிருக்கிறார். இந்த மரத்தின் விதைகள் முற்றிக் கீழே விழுந்தவுடன், கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து அந்த மரத்தின் அடிப்பாகத்தில் போய் ஒட்டிக்கொண்டு விடுமாம்! அதேபோல் காஞ்சி மகான் கண்டு பரவசப்பட்ட இன்னொரு மரம் கதம்ப மரம். இந்த மரங்கள் அடர்ந்த கதம்பவனத்திடையேதான் அம்பிகை ராஜராஜேஸ்வரி குடியிருக்கிறாள்.

மூங்கில், பனை, பலா, வாழை ஆகிய மரங்கள் மக்களுக்குப் பயன்படும் மரங்கள் மட்டுமல்ல. அவையும் சில ஊர்களின் ஸ்தல விருட்சங்களே. சமையலுக்கு உதவும் பெருங்காயம் என்பது ஒரு வகை மரப்பிசின். இமயமலையில் உள்ள ஸ்தலம் ஒன்றில் பெருங்காய மரம் ஸ்தல விருட்சமாம்! நினைத்ததைத் தரவல்ல கற்பகமரமும், இமயத்தில் ஜோஷிமடத்தின் ஸ்தலவிருட்சம். பத்ரிநாத்தில் இலந்தை மரம் ஸ்தல விருட்சம்.

தாவர இயல் வல்லுநர்களுக்குக்கூட பெயர் தெரியாத மரம் ஒன்று பிரான் மலையில் தலவிருட்சமாக இருக்கிறதாம். பெயர் தெரியாத மரம் என்றே அதற்குப் பெயர்!

மரம், செடி, கொடிகளில் மனிதனுக்குப் பயன் தருவது, தராதது என்கிற வித்தியாசம் இல்லை. அவை அனைத்துமே பூமித் தாயின் உயிர்த்துடிப்பைக் காட்டுபவை. அதனால்தான் கள்ளி, முள்ளி, பூளை, எருக்கு ஆகியவைகூட தெய்வத்தன்மை உடையதாகக் கண்டார்கள் நம்மவர்கள். காடுகள் மழை பொழிவிக்கும் என்றும், காற்றில் பிராணவாயுவைப் பெருக்கும் என்றும் விஞ்ஞானம் ஓயாமல் பாடம் புகட்டுகிறது. காடுகளை, தெய்வமாகவே கண்டு வணங்குவதில் விஞ்ஞானமும் மெய்ஞானமும் சங்கமிக்கின்றன அல்லவா?

**(நன்றி : பூசை ச.அருணவசந்தன்)**

| வனம் பெயர் கொண்ட ஊர்களில் சில | | |
|---|---|---|
| கடம்ப வனம் | மதுரை | கடம்ப மரம் |
| தில்லை வனம் | சிதம்பரம் | சரபுன்னை |
| ஆம்ர வனம் | காஞ்சிபுரம் | மாமரம் |
| வேணு வனம் | நெல்லை | மூங்கில் |
| அரசவனம் | திருவாவடுதுறை | அரச மரம் |
| தாருகாவனம் | துவாரகா | தேவதாருமரம் |



# "இங்கே அகல்யாங்கறது..."

- நிலா கிருஷ்ணமூர்த்தி



வீட்டு வேலைகளை முடித்துவிட்டு சோபாவில் வந்து அமர்ந்தாள் அகல்யா.

ஹாலில் காலிங்பெல் ஒலித்தது. 'அம்மா, அப்பா ரெண்டு பேரும் நகைகள் வாங்கப் போயிருக்கிறாங்க. மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்தவங்க யாராவது வந்திருப்பாங் களோ?' கதவைத் திறந்தாள் .

''இங்கே அகல்யாங்கிறது...'' கேட்டான் ராம்குமார்.

''நான்தான் அகல்யா. நீங்க...?''

''பட்டர்ஃபிளை கூரியரி லிருந்து வர்றேன்... இந்தாங்க பார்சல்!''

அஞ்சல் வழிக் கல்வி இயக்கத்திலிருந்து பார்சல் வந்திருந்தது.

''இந்த ஃபார்ம்மில் கையெ ழுத்துப் போடுங்க'' ராம்குமார் நீட்டிய பேப்பரில் கையெழுத் திட்டாள் அகல்யா.

''கொஞ்சம் தண்ணி கொடுக் கறீங்களா?'' - இது ராம்குமார்.

''இருங்க. கொண்டு வர்றேன்'' என்று சொல்லிவிட்டு உள்ளே சென்று தண்ணீர் சொம்போடு வந்தாள்.

தண்ணீரை வாங்கிக் குடித்துவிட்டு திரும்பிச் செல்கையில், மீண்டும் ஒரு முறை அவளை ஆழமாய்ப் பார்த்தான் ராம்குமார்.

மறுநாள் -

தொலைபேசி ஒலித்தது. அகல்யாவின் அப்பா சுந்தரம்தான் எடுத்தார்.

''ஹலோ...''

''நான்தான் மாப்பிள்ளையோட அப்பா பேசறேன்'' என்றது எதிர்முனை.

''சொல்லுங்க சம்பந்தி! என்ன விஷயம்? நாளைக்குத்தான் மாப்பிள்ளை மட்டும் தனியா வந்து பார்க்கணும்னு சொன் னார்'' என்று புரியாமல் கேட்டார்.

''அதுலதான் சிக்கல்.''

''என்ன சொல்றீங்க சம்பந்தி?'' இடுக்கிட்டார் சுந்தரம்.

''நாளைக்கு நம்ம பையன் வரப் போறது இல்லை.''

''கொஞ்சம் புரியும்படியா பேசுங்களேன்...''

''நேத்திக்கே உங்க பொண்ணைப் பாத்துட்டான். கூரியர் பார்சலைக் கொடுக்க உங்க வீட்டுக்கு வந்தப்பவே, பொண்ணைப் பார்த்துட்டானாம். முகூர்த்தத் தேதி எப்பன்னு கேட்டான்'' என்று எதிர்முனை சொல்லிக்கொண்டிருக்க... போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது சுந்தரத்துக்கு.




குக் கிடைத்த உயர்ந்த அங்கீ காரம்தான் இந்த விருது'' என்றவரிடம், ''உங்கள் செயல்பாடுகளை மக்கள் மத்தியில் எப்படிக் கொண்டு சேர்த்தீர்கள்'' என்றோம்.

''1995க்குப் பிறகு தர்மபுரி மாவட்டத்தில் நடந்த சிசு மரணங்களில், 50 சதவிகிதத்துக்கும் அதிகமானவை சிசுக் கொலைகள்தான். குறிப்பாக, பெண் சிசுக்கள். இது பெற்றோர்களாலும் உறவினர்களாலும் நிகழ்த்தப்பட்டதுதான் பெருங்கொடுமை! இங்குள்ள மக்களிடையே, பெண் குழந்தை பிறக்கவேகூடாது என்ற எண்ணம் இருந்தது. இந்த மனநிலையை மாற்ற, தெரு நாடகங்கள் மூலம் மக்கள் மனத்தில் மாற்றத்தை ஏற்படுத்தி, பெண் குழந்தையின் அவசியத்தையும், அற்புதத்தையும் அவர்களுக்கு விளக்கினோம்.

இங்கு பணியாற்றிய செவிலியர்களுக்கு, வாகனம் ஓட்டும் பயிற்சியும் பேச்சாற்றல் பயிற்சியும் வழங்கினோம். இதனால் அவர்களால் கிராமப் பகுதிகளுக்கு எளிதில் சென்று மருத்துவ சேவை செய்ய முடிந்தது.

# அசத்தும் அல்ஃபோன்சா!

உலக செவிலியர் தினத்தையொட்டி, இந்திய அரசு 26 பேருக்கு 'ஃப்ளாரன்ஸ் நைட்டிங் கேல்' விருது வழங்கிக் கௌரவித்திருக்கிறது. அவர்களில் தமிழகத்தைச் சார்ந்த அல்ஃபோன்ஸா மேரியும் அடக்கம். யார் இவர்? தர்மபுரி மாவட்ட தாய்-சேய் நல மருத்துவர். மகிழ்ச்சியில் இருந்தவரைச் சந்தித்தோம்...

''**நா**ன் பிறந்த தர்மபுரி மண்ணை, பெண் சிசுக் கொலை இல்லாத மண்ணாக மாற்ற வேண்டும் என்ற எண்ணத் துக்

முன்பு 40 சதவிகித பிரசவங்கள் வீடுகளில்தான் நடந்தன. இதனால் போதிய மருத்துவ வசதிகளின்றி தாயோ அல்லது சேயோ மரணம் அடையும் வாய்ப்புகள் அதிகம். வாகனம் ஓட்ட பயின்ற செவிலியர்கள், பிரசவம் நடக்கும் வீடுகளுக்கே எளிதில் சென்று தாயையும் சேயையும் காப்பாற்ற முடிந்தது.

டென்மார்க் நாட்டின் உதவியோடு செயல்படுத்தப்பட்ட 'டேனிடா' திட்டத்தை, எங்கள் மாவட்டத்தில் நாங்கள் மிகச் சரியாகப் பயன்படுத்திக்கொண்டோம். இதன்மூலம், கிராமங்களில் துணை சுகாதார நிலைய கட்டடங்கள் கட்டப்பட்டன. இதனால் செவிலியர்களால் அங்கேயே தங்கிப் பணியாற்ற முடிந்தது'' என்கிறார்.

''தர்மபுரி மாவட்டத்தில் அதிக அளவில் நடைபெற்ற பெண் சிசுக் கொலைகளுக்கு என்ன காரணம்?'' என்று கேட்டோம்.

''கல்வியறிவு இல்லாததுதான் முதல் காரணம்.

"1995க்குப் பிறகு, தர்மபுரி மாவட்டத்தில் நடந்த சிசு மரணங்களில் 50 சதவிகிதத்துக்கும் அதிகமானவை பெண் சிசுக்கொலைகள்தான். இது, பெற்றோர்களாலும், உறவினர்களாலுமே நிகழ்த்தப்பட்டதுதான் பெருங்கொடுமை!"

# அல்ஃபோன்ஸா!

பெரும்பான்மையான பெற்றோர்கள் சென்னை, பெங்களூர் போன்ற பெருநகரங்களுக்குப் பிழைப்புத் தேடிச் சென்று விடுகின்றனர். குழந்தைகள் தங்களது உறவினர்கள் மத்தியில் வளர்கின்றனர். இதனால், கல்வி, சுகாதாரம் போன்றவை அவர்களுக்குக் கிடைக்காமலே போய் விடுகிறது'' என்றவரிடம் , ''இப்பணியில் நீங்கள் சந்தித்த சவால் என்ன'' என்று கேட்டோம்.

''குழந்தை பிறந்த அன்றே அக்குழந்தையின் வீட்டுக்குச் சென்று பெண் சிசுக் கொலையைத் தடுப்பதுதான் எங்களுக்கு மிகப் பெரிய சவாலாக இருந்தது. எனவே, எந்தெந்தக் கிராமங்களில், எந்தெந்தக் தெருவில் யார் யார் கருவுற்றிருக்கிறார்கள், யாருக்கு எப்பொழுது பிரசவம் போன்ற விவரங்களுடன், எங்களது செவிலியர்கள் சிறப்பாகச் செயல்பட்டதால்தான் 50 சதவிகிதமாக இருந்த பெண் சிசுக் கொலையை 0.01 சதவிகிதமாகக் குறைக்க முடிந்தது!'' என்கிறார்.

''தர்மபுரி மாவட்ட கிராமம் ஒன்றில் ஒரு பெண்ணுக்குப் பிறந்த பெண் குழந்தையைக் கொல்வதற்கு, அப்பெண்ணின் மூத்த பெண்ணிடமே, பூச்சிக் கொல்லி மருந்தினை வாங்கி வரச் செய்துவிட்டனர். இதையறிந்த அக்குழந்தையின் தாய், குழந்தையைக் கொல்வதற்கு மறுத்து விட்டு, தமது தாய் வீட்டுக்குச் சென்றுவிட்டார். இதையறிந்த உடனே நாங்கள் அக்கிராமத்துக்குச் சென்று இரு வீட்டாரிடமும் பேசி, சமரசம் செய்து சேர்த்து வைத்தோம். இன்று அந்த வீட்டில் உள்ள அந்த இரண்டு பெண் குழந்தைகளுமே நன்றாகப் படித்துக்கொண்டிருக்கிறார்கள்'' என்கிறார்.



* விருது பெறும் அல்ஃபோன்ஸா

''ஒரு பெண்ணுக்குத்தான் தனக்கு குழந்தை பெற்றுக் கொள்ளக்கூடிய உடல்நிலை, மன நிலை இருக்கிறதா எனத் தெரியும். எனவே குழந்தை பெறும் உரிமை, கருத்தரிக்கும் உரிமை பெண்களிடம் தான் இருக்க வேண்டும். பெண்களுக்குச் சிந்திக்கவும், அதைச் செயல்படுத்துவதற்கும் உரிமைகள் கிடைத்தால் மட்டுமே, இந்த உலகம் உன்னத நிலையை அடைய முடியும். கணவன்மார்கள் வீட்டு வேலைகளில் குறிப்பாக, மனைவி கருவுற்றிருக்கும்போது உதவி செய்வது அவசியமான ஒன்று!'' என்றவரிடம், ''பெண் சிசுக் கொலையைக் குறைக்க தர்மபுரி மாவட்டத்துக்கு அரசாங்கம் என்னதான் செய்ய வேண்டும்?'' என வினவினோம்.

''அரசாங்கமும் தனியார் நிறுவனங்களும் தொழிற்சாலைகளை அமைக்க வேண்டும். அதனால், இங்குள்ள மக்கள் வயிற்றுப் பிழைப்புக்காக புலம் பெயர்வது குறைவதோடு மட்டுமல்லாமல், தங்களது குழந்தைகளையும் ஒழுங்காக பள்ளிக்கு அனுப்புவார்கள். தொழில்துறை, கல்வித்துறை, சுகாதாரத் துறை இந்த மூன்று துறைகளும் இணைந்து இங்கு பணியாற்றினால், தர்மபுரி மாவட்டத்தின் வளர்ச்சி தவிர்க்க முடியாத ஒன்றாகி விடும்'' என்ற அல்ஃபோன்ஸா மேரியின் வார்த்தைகளில் தன்னம்பிக்கை ஒளிர்கிறது.

– உ. கிறிஸ்டோபர் சார்லஸ்



## உலகே மாயம்

ஒரு குற்றவாளிக்கு அதிகபட்சம் எத்தனை ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்க முடியும்? ஆயுள் தண்டனை. அதுவும் போதாது என்றால் பிரேமானந்தா ஸ்டைலில் இரட்டை ஆயுள்.

ஆனால், எகிப்து நாட்டின் நீதிமன்றம் ஆயிரம் வருடங்களுக்குச் சிறைத்தண்டனை விதித்திருக்கிறது! குற்றவாளி அப்படி என்னதான் செய்தார்?

பணமோசடிதான். (எகிப்திலுமா?) ஏமாந்துபோனது ஒருவர், இருவர் அல்ல. மொத்தம் 480 பேர். மோசடி செய்த தொகை 52 மில்லியன் டாலர்கள்.

தம்மிடம் கொடுக்கும் தொகையைப் பாதுகாப்பாக முதலீடு செய்வதாகவும், அதன்மூலம் நல்ல லாபம் கிடைக்குமென்றும் கூறியதை நம்பி, 'க்யூ'வில் நின்று பணத்தைக் கொடுத்திருக்கிறார்கள்.

இப்படிப் பண ஆசைபிடித்த பேய்கள் இருக்கும்வரைக்கும், மோசடி குற்றங்கள் நடப்பதில் ஆச்சரியம் என்ன இருக்க முடியும்?

போர்ச்சுக்கல் பிரதமர் சாக்ரேட்ஸ், ஃபிளைட் ஏறிப்போய் வெனிசுலா அதிபர் சாவேஸைச் சந்தித்தார். பயணத்தின் நடுவே, ஹாயாக சிகரெட்டைப் பற்ற வைத்திருக்கிறார். பணிப்பெண்கள் ஓடி வந்து 'விமானத்தில் புகைவிடக்கூடாது' என்று தடுத்திருக்கிறார்கள்.

விஷயம் எப்படியோ பற்றிவிட்டது. சட்டத்தை மீறியதற்காக, சாக்ரேட்ஸ் அபராதம் கட்ட வேண்டுமென்று எதிர்க்கட்சிகள் குரல்கொடுக்க ஆரம்பித்துவிட்டன. மன்னிப்பு கேட்டுக்கொண்ட சாக்ரேட்ஸ், 'பொது இடத்தில் தடையைமீறி புகை பிடிப்பவர்களின் கஷ்டம் இப்போதுதான் எனக்குப் புரிகிறது' என்று ஃபீலிங் ஆகியிருக்கிறார்.

* ஹாமன்ஸ்



சாக்ரேட்ஸைப் பார்த்த சாவேஸ், 'நீங்க தம் அடிப்பீங்களா?' என்று விசாரித்திருக்கிறார். 'அந்தப் பழக்கத்தை எப்பவோ நான் விட்டுட்டேன்' என்று அசடுவழிந்தாராம் சாக்ரேட்ஸ்.

# இது ரோபோ சிம்பொனி!




நம் நாட்டில், மாணவர்கள் அரசியலில் ஈடுபட்டு தேர்தலில் ஜெயிப்பதெல்லாம் சினிமாவில் மட்டுமே நடக்கிற விஷயம். அது நடைமுறையில் சாத்தியம்தான் என்று நிரூபித்திருக்கிறது அமெரிக்கா.

ஒக்லஹாமா மாகாணத்தின் மஸ்கோஜி நகர மேயர் தேர்தலில், 19 வயது கல்லூரி மாணவர் வெற்றி பெற்றிருக்கிறார். ஏற்கெனவே மேயராக இருந்தவரை எதிர்த்துப் போட்டியிட்ட இவருக்கு, எழுபது சதவிகித வாக்குகள் கிடைத்திருக்கின்றன. மக்களின் நம்பிக்கையைக் காப்பாற்றுவேன் என்று வாக்குறுதி கொடுத்திருக்கிற

* சாவேஸ்

ஹாமன்ஸுக்கு, ஒக்லஹாமா மாகாணத்தின் கவர்னராவது, அதன் பிறகு அமெரிக்க அதிபராவது என்று அடுத்தடுத்து நிறைய திட்டங்கள் இருக்கின்றனவாம்!

இதைத்தான் சொன்னார்கள், பெருமலையைச் சாய்க்க சிறு உளி போதும் என்று!

**இ**சை என்பது ஆத்மாவோடு சம்பந்தப்பட்ட விஷயம் என்று நாம் இங்கே நெக்குருகிக்கொண்டிருக்கையில், ஒரு 'ரோபோ' பக்காவாக சிம்பொனி ஆர்க்கெஸ்ட்ராவை நடத்தி முடித்திருக்கிறது ஜப்பான் நாட்டில்!

கையில் குச்சியைப் பிடித்துக்கொண்டு, ரோபோ இசைக்கலைஞர்களை 'கண்டக்ட்' செய்ததைப் பார்த்த ரசிகர்கள், காதுகளையும் கண்களையும் மட்டுமின்றி, வாயையும் திறந்து வைத்து (பிளந்து?) ரசித்திருக்கிறார்கள்.

இந்த நவீன அசிமோ மாடல் ரோபோவை ஹோண்டா நிறுவனம் அறிமுகப்படுத்தியிருக்கிறது.

வெகுவிரைவில் ரோபோக்கள் சம்மணமிட்டு உட்கார்ந்து தொடையைத் தட்டியபடி பாடவும்கூட செய்யலாம்!



* சாக்ரேட்ஸ்

**டோ**க்கியோவில் ஓர் இளைஞன் கடைக்குச் சென்று, கத்தியைக் காட்டி மிரட்டி பெருந்தொகையொன்றைப் பறித்திருக்கிறான். ஆனால், அதே வேகத்தில் பறித்த பணத்தை எடுத்துக்கொண்டு அவன் போனது போலீஸ் ஸ்டேஷனுக்கு!

ஆளை எப்படிப் பிடிப்பது என்று யோசித்துக்கொண்டிருந்த காவல்துறைக்கு இன்ப அதிர்ச்சி. என்னவென்று விசாரித்தால், 'கையில் பணமில்லை. மிரட்டி பணம் பறித்தேன். ஆனால், அது தவறு என்று புரிந்துவிட்டது. என்னைத் தண்டியுங்கள்' என்று சொல்லியிருக்கிறான்!

ஒரே நொடியில் ஞானோதயம் என்பது ஆச்சர்யமான விஷயம்தான்.

– ஸாந்த்

# தராசு

சாமுண்டீஸ்வரி



ஆயிரம், ஐந்நூறு, நூறு என்று, ரூபாய் நோட்டுகளை எண்ணும் எந்திரத்தில் வைத்து எடுத்துக் கட்டிக் கொண்டிருந்த காசாளர் தட்சிணாமூர்த்தி, தமது கவுன்டருக்கு எதிரே வந்து நின்ற பெண்ணிடம் கண்களாலேயே என்ன என்று வினவினான்.

''சார், ஒரு டி.டி. எடுக்கணும்.''

அந்தப் பெண் பர்ஸிலிருந்து பணம் எடுத்து நீட்டினார். வியர்வையில் கசங்கிய, மூன்று நூறு ரூபாய்களும் ஒரு இருபது ரூபாயும்.

''மணி என்ன பாத்தியா?''

பெரிய கடிகாரத்தைக் காட்டினான்.

''கொஞ்சம் லேட்டாயிடிச்சு சார்.''

''கொஞ்சம் இல்லை. பதினஞ்சு நிமிஷம். தொள்ளாயிரம் விநாடி. போய்ட்டு நாளைக்கு ஒன்பது மணிக்கு வா.''

''சார் பையனோட பரீட்சை ஃபீஸ். இன்னிக்குத்தான் கடைசி நாள்.''

''அதெல்லாம் முடியாதும்மா. கணக்கு முடிச்சாச்சு. ஏம்பா செக்யூரிட்டி...''

காசாளரின் உரத்த குரல் கேட்டு ஓடி வந்த காக்கிச் சட்டைக்காரரிடம், ''ஏம்பா க்ளோசிங் அவர்ஸ் முடிஞ்சப்புறம் உள்ள விடறீங்க'' என்று இறைந்தான்.

''சார் இந்த பேனரைக் கட்ட இடம் பாத்துட்டு இருந்ததுல, இந்த அம்மா உள்ள வந்ததைக் கவனிக்கல.''

அவர் கையில் 'வாடிக்கையாளர் வாரம்' என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் பளிச்சென்று எழுதப்பட்ட பதாகை.

''போம்மா! நாளைக்கு வா.''

முதுகில் நீளமான துப்பாக்கி பிணைக்கப்பட்ட காக்கி உடுப்புக்காரரின் ஆணைக்கு அடிபணிந்து, வெளியேறிய பெண்ணின் முதுகைப் பார்த்தவாறு, 'வந்துட்டாங்க பாரு! கழுத்தறுக்கறதுக்குன்னே - நேரம் காலம் தெரியாம...' என்று முணுமுணுத்த தட்சிணாமூர்த்தியை, கிளை மேலாளர் அழைப்பதாக ப்யூன் வந்து சொன்னான். பணக்கூண்டு அறையைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்து, மேலாளரின் அறைக்குள் நுழைந்தான்.

மேலாளரின் மேசை மீது பணக்கட்டுகள் இறைந்து கிடந்தன.

''மிஸ்டர் தட்சிணா... இந்த கேஷை சார் அக்கவுன்ட்ல கட்டிடுங்க.''

எதிரே உட்கார்ந்திருந்த திருவாளர் குப்தா, தட்சிணாவைப் பார்த்து ஆசி அருள்வது போல் புன்னகைத்தார்.

வங்கியின் முக்கிய வாடிக்கையாளர்களில் ஒருவர்.

''உம்... மிஸ்டர் தட்சிணா, இன்னும் சலான் ஃபில் - அப் பண்ணல.''

''நோ ப்ராப்ளம் சார். நானே பண்ணிடறேன்.'' பவ்யமாய்ச் சொன்னார் தட்சிணா!

ஐ.பி.எல். போட்டிக்கு மத்தியில் எல்லோரும் மந்திரா பேடியை மறந்துவிட்டார்கள். 2003, 2007 உலகக் கோப்பையின் போது மந்திராவும் சோனி மேக்ஸும் எப்படியெல்லாம் கொட்டம் அடித்தார்கள்! இந்த முறை சோனி மேக்ஸ் தன்னை அழைக்காதது பற்றி வெளிப்படையாகக் கருத்துத் தெரிவித்திருக்கிறார் மந்திரா பேடி. அதேசமயம் கிரிக்கெட் தொடர்பான தமது கருத்துகளையும் சமயம் பார்த்துப் பதிவு செய்திருக்கிறார். குறிப்பாக, சியர் லீடர்ஸ் பெண்களுக்குப் பலத்த ஆதரவு கொடுக்கிறார் மந்திரா. 'அவர்கள் ஆட்டத்தின் முக்கிய அங்கமாக இருப்பதில் எந்தத் தவறும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், அவர்களை கேமராதான் தவறான கோணத்தில் காட்டுகிறது' என்பது மந்திராவின் மேலான கருத்து. சென்னையும் பஞ்சாப் அணியும் மோதிக்கொண்ட முதல் ஆட்டத்தில், கறுப்பாக இருந்த ஒரே காரணத்துக்காக, இரண்டு சியர் லீடர்ஸ் பெண்களை மைதானத்துக்கு வெளியே நிறுத்திய செய்தி பற்றி, மந்திரா உள்பட யாரும் பெரிதாக அலட்டிக்கொள்ளவில்லை என்பது தான் பெரிய ஆச்சர்யம்.




* வார்னே

# மயக்கும்

* கயிஃப் (3.3 கோடி)



* உத்தப்பா (3.2 கோடி)



* இஷாந்த் (3.8 கோடி)



யோ மகேஷ் பற்றி சில வாரங்களுக்கு முன்னால் அடிக்கோடிட்டிருந்தோம். ஆனால், இப்போது அவரைப் பற்றிக் கூடுதலாக நான்கு வரிகள் எழுதவேண்டிய கட்டாயம் எழுந்துவிட்டது. ஒன்றரை மாதமாக நடந்த ஐ.பி.எல். போட்டியில் இரண்டு புதுமுகங்கள்தான் சாதனைப் பட்டியலில் இடம் பிடித்துள்ளார்கள். ஒருவர் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த மார்ஷ். வந்த வேகத்தில் மளமளவென ரன்கள் குவித்தவர். அடுத்தவர், டெல்லி அணிக்காக ஆடிய தமிழரான யோ மகேஷ். எம்.ஆர்.எஃப் அகாடமியில் யோ மகேஷ் பயின்ற அத்தனை கலைகளும் மைதானத்தில் பிரதிபலித்தன. போட்டியை விட்டு வெளியேறுகிற சமயம் பார்த்து, நான்கு விக்கெட்டுகள் எடுத்து டெல்லி அணியின் மானத்தைக் காப்பாற்றினார் யோ மகேஷ். மும்பை அணிக்கான போட்டியில் சச்சினை க்ளீன் போல்ட் செய்த காட்சியை யோ மகேஷ் ஆயுள் வரைக்கும் மறக்கமாட்டார். இந்திய ஏ அணிக்காக, ஏற்கெனவே ஆடிய யோ மகேஷ், இந்திய அணிக்காக ஆடும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பது சொல்லித் தெரிய

வேண்டியதில்லை. ஆமாம், இவரை எப்படி சென்னை கைவிட்டது?

ச.ந. கண்ணன்

ஐ.பி.எல். அணிகளிலேயே குறைவாக பணத்தை முதலீடு செய்த அணி - ராஜஸ்தான் அணி. மொத்தம் 67 மில்லியன் டாலர்களுக்கு எமர்ஜிங் மீடியா நிறுவனத்தால் வாங்கப்பட்ட அணி அது. (ஆனால், மும்பை மற்றும் பெங்களூர் அணிகள் இதைவிட இருமடங்கு அதிக விலைக்கு விலை போயின). ராஜஸ்தான் அணியில், அதிக சம்பாத்தியம் பெறுகிற வீரர் முகமது கயிப். அவருடைய சம்பளம் 3.3 கோடி. ஏன் வார்னேவுக்கே 1.8 கோடிதான் வழங்கப்பட்டிருக்கிறது. இதுபோல, பணத்துக்கும் பங்களிப்புக்கும் மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசத்தைக் காண முடிந்தது. மெக்ராத்தின் பந்துகளை எந்தவொரு அணியாலும் சமாளிக்க முடியவில்லை. ஆனால், அவருக்குக் கிடைத்த சம்பளம் 1.4 கோடி. ஆனால், நேற்று முளைத்த இஷாந்த் சர்மாவுக்கு 3.8 கோடி. ஆனால், இஷாந்தின் பந்துகளை லட்டு போல எதிர் கொண்டார்கள் பேட்ஸ்மேன்கள். இதே நிலைமைதான் பெங்களூர் அணிக்காக ஆடிய ஸ்மித்க்கும். அதிக ரன்கள் குவித்த கௌதம் கம்பீருக்குக்கூட 2.9 கோடிதான் மதிப்பீடு செய்யப்பட்டது. ஆனால், 3.6 கோடிக்கு விலை பேசப்பட்ட காலிஸ், மைதானத்தின் நடுவே பரிதாபமாகக் காட்சியளித்தார். உத்தப்பா (3.2 கோடி), மனோஜ் திவாரி (2.7 கோடி) ஆகியோரும் கொடுத்த சம்பளத்துக்கு ஏற்ப தமது பங்களிப்பை அளிக்க முடியாமல் தவித்தனர். அடுத்தமுறை ஏலம் நடக்கும்போது பல மயக்கங்கள் நமக்குக் காத்திருக்கின்றன.

# கோடிகள்!



அமரர் கல்கி

# ஒற்றை ரோஜா

ரயில்வே போலீஸ் ஸ்டேஷனுக்கு என்னைக் கொண்டு போனார்கள். என்னுடைய பெட்டி, படுக்கையும் கொண்டு வரப்பட்டன. 'புஷ் கோட்' மனிதர்கள் மூவரும் வந்து பெட்டி, படுக்கைகளைச் சோதனை போட்டார்கள்; என்னையும் சோதித்தார்கள். துணிகளைக் கிழித்து மட்டும் பார்க்கவில்லை; மற்றபடி, சாங்கோபாங்கமாகத் தேடினார்கள். என்னிடமிருந்து ஒன்றும் அகப்படவில்லை. அவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பியதாகத் தெரிந்தது.

அன்றிரவு நான் தூங்கவில்லையென்று சொல்லவும் வேண்டுமா? என் எண்ணமெல்லாம் மனோகரியின் பேரிலேயே இருந்தது. அந்த ஒற்றை ரோஜாப்பூவின் ஞாபகமும் அடிக்கடி வந்தது.

காலை மூன்று மணி சுமாருக்கு என்னை விடுதலை செய்துவிட்டார்கள்! பெரிய போலீஸ் அதிகாரி ஒருவர் வந்து, "தவறுதல் நடந்துவிட்டது. உம்மைப் பிடித்துவைப்பதற்கு எவ்வித முகாந்தரமும் இல்லை. அந்த முட்டாள்கள் உம்மைப் பிடித்து அடைத்தார்கள். அதற்காக ரொம்பவும் வருந்துகிறேன்!" என்றார்.

"அதனால் பாதகமில்லை; இது எனக்கு ஒரு நல்ல அனுபவம்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன். காலை நாலு மணிக்குத் திருச்சியிலிருந்து புறப்படும் பாஸஞ்சர் வண்டியில் ஏறிச் செல்லத் தீர்மானித்தேன். மறுபடியும் அதே பிளாட்பாரத்துக்குப் போனேன். மனோகரியும் நானும் நின்று பேசிக்கொண்டிருந்த அதே தூண் மறைவுக்கு மறுபடியும் சென்றேன். நான் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. தூண் ஓரத்தில் அந்த ஒற்றை ரோஜாப்பூ-காகிதப்பூ கிடந்தது. மனோகரி அதைக் கையில் எடுத்து எனக்குக் காட்டிவிட்டு மறுபடியும் தலையில் வைத்துக் கொண்டாள் அல்லவா? சரியாக வைத்துக் கொள்ளவில்லை. ஆகையால் அது கீழே விழுந்துவிட்டது. விழுந்ததை அவள் கவனிக்கவில்லை; ஆனால், நான் கவனித்தேன். இதற்குள் போலீஸார் நெருங்கிவிட்டபடியால் நாங்கள் இருவரும் முன்னோக்கிச் சென்றுவிட்டோம்.

அந்த ஒற்றை ரோஜாப்பூவை இப்போது ஆவலுடன் எடுத்து என் பெட்டிக்குள் வைத்துப் பூட்டிக்கொண்டேன். சிறிது நேரத்துக்கெல்லாம் ரயிலும் வந்தது. அதில் ஏறிக்கொண்டேன். மனோகரி முதலியவர்கள் என்ன ஆனார்கள் என்று தெரிந்து கொள்ள எனக்கு ஆவல் இல்லாமற் போகவில்லை. அது எப்படியும் பின்னால் தெரியும் என்று நிச்சயப்படுத்திக் கொண்டேன்.

ரயில் புறப்படும் சமயத்தில் அந்தக் கைப்பெட்டிக்காரர் பிளாட்பாரத்துக்கு ஓடிவந்து அங்குமிங்கும் அலைந்தார். நான் அவரைக் கையைத் தட்டி அழைத்தேன். அவர் என்னைப் பார்த்ததும் ஆர்வத்துடன் அருகில் வந்தார். "பெரிய பிசகு நேர்ந்துவிட்டது. மன்னிக்கவேணும். சென்னையில் தங்கள் விலாசம் என்ன? அங்கே வந்து எல்லாம் விவரமாகச் சொல்கிறேன்!" என்றார். என் விலாசத்தை அவருக்குத் தெரிவித்துவிட்டு, "எனக்குக் கொஞ்சம் கூட வருத்தம் இல்லையென்று மனோகரியிடம் சொல்லுங்கள்!" என்றேன்.

சென்னைக்குத் திரும்பிவந்து இரண்டு

4 நெடுங்கதை

நாள் வரையில் என் அறையைவிட்டு வெளிக் கிளம்பவில்லை. பத்திரிகைகளை மட்டும் ஆவலுடன் பார்த்தேன். ஒரு பிரபல சுதேச சமஸ்தான மகாராஜாவின் பிரசித்தி பெற்ற விலை உயர்ந்த வைரம் காணாமற் போய்விட்டதென்றும், இலங்கைப் போலீஸார், சுங்க அதிகாரிகள் முதலியோர் அதைத் தேடி வருகிறார்கள் என்றும் பத்திரிகையின் ஒரு மூலையில் சிறிய செய்தி ஒன்று காணப்பட்டது.

அன்றிரவு என் அறைக் கதவை இறுகத் தாளிட்டுக்கொண்டு அந்த ஒற்றை ரோஜாப் பூவை எடுத்தேன். அதைக் கோத்திருந்த நூலைப் பிரித்துவிட்டுக் கையினால் தட்டினேன். மேஜை மீது டணார் என்று விழுந்தது!

'கண்ணைப் பறித்தது' என்று ஆசிரியர்கள் எழுதுவார்களே, என் வாழ்க்கையில் அன்றைக்குத்தான் அது உண்மையாயிற்று. அந்த மாதிரி விடிவெள்ளி அவ்வளவு பெரிய வைரத்தை, நான் அன்றுவரை பார்த்ததே இல்லை. அந்த வைரத்திலிருந்து வெளியான விதவிதமான வர்ணக் கிரணங்களைத்தான் என்னவென்று வர்ணிப்பது! பாபநாசத்தில் அருவி விழும் இடத்தில் நான் பார்த்த வானவில்லின் அதிசய வர்ண ஜாலங்களெல்லாம், இந்த அற்புத வைரத்தின் முன்னால் மண்டி போட்டு ஒளிப் பிச்சை கேட்க வேண்டியதுதான் என்று தோன்றிற்று.



வெகுநேரம் அந்த வைரத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, மறுபடியும் முன்போல் அந்தக் காகித ரோஜாப்பூவுக்குள்ளேயே வைத்துத் தைத்தேன். பெட்டிக்குள் பத்திரப்படுத்தினேன்.

மறுநாள் நான் எதிர்பார்த்திருந்த மனிதர் வந்தார். தவறு நேர்ந்ததின் காரணங்களை விளக்கினார். அந்தப் பெண், 'நான் என் காதலனோடு இந்தியாவுக்குப் போகிறேன்; என்னைத் தேடவேண்டாம்' என்று தகப்பனாருக்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டு அவருக்குத் தெரியாமல் வந்துவிட்டாளாம். தகப்பனார் வைர வியாபாரியாம். 'ஒரே ஒரு வைரம் மட்டும் எடுத்துப் போகிறேன். அது எனக்கு உங்கள் ஸ்ரீதனமாக இருக்கட்டும்' என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தாளாம். அந்த வைரம் ஒரு மகாராஜாவுக்குச் சொந்தமான விலையுயர்ந்த வைரம் என்றும், ஒன்றரை லட்சம் பெறுமானது என்றும் கூறினார். தகப்பனார் பெண்ணையும் வைரத்தையும் தேடிக் கொண்டு புறப்பட்டார். அவள் ரயிலில் பிரயாணம் செய்கிறாள் என்று அறிந்து, முன்னதாக விமானத்தில் திருச்சிக்கு வந்துவிட்டாராம். இந்த மனிதரையும் தன்னுடைய ஒத்தாசைக்கு அழைத்து வந்தாராம். இதெல்லாம் சுங்க அதிகாரிகள் காதில் அரைகுறையாக விழுந்ததில், அவர்கள் வைரத்தைச் சுங்க வரி கொடுக்காமல் கொண்டு போவதைத் தடுக்க முயற்சி எடுத்தார்களாம். மனோகரி தன் கடிதத்தில் குறிப்பிட்ட காதலன் நானாகத்தான் இருக்க வேண்டும் என்று தவறாக எண்ணி, என்னைக்

**நதிக்கரை மரங்களில் வாழ்ந்த பட்சிகள், எங்களை ஆமோதித்து மங்கள கீதம் பாடின!**

கைது செய்ய இவர் ஏற்பாடு பண்ணி னாராம்.

என்னுடைய வாயைப் பிடுங்கி, அந்த ஒற்றை ரோஜாப்பூவில் வைரம் இருக்கிற விஷயம் எனக்குத் தெரியுமா என்று அறிந்து கொள்வதற்காக, அம்மாதிரி பயங்கரக் கதையை அவர் கற்பனை செய்து கூறி னாராம்.

என்னைவிட அவள் பெரிய கற்பனைக் காரி, ஒரு காதலனையே சிருஷ்டி செய்துவிட்டாள் என்பது எனக்கு என்ன மாய்த் தெரியும்? ஆனால், சில சமயம் கற்பனையைக் காட்டிலும் உண்மையில் நடப்பது அதிசயமாயி ருக்கிறது. ''உன்னை நினைத்து நினைத்து அந்தப் பெண் உருகிக் கொண்டிருக்கிறாள். ஸர்தார் பவன் ஹோட்டலில் அப்பனும் மகளும் தங்கியிருக்கிறார்கள். அவர் களைப் போய்ப் பார்!'' என்றார் அந்த மனிதர்.



''இந்த ஆட்சியில் சட்டம் ஒழுங்கு சரியில்லை... மணல் திருட்டு நிறுத்தப்படவில்லை; ரேஷன் அரிசி கடத்தல் தடுக்கப்படவில்லை. எனவே, நாங்கள் ஆட்சிக்குத் தரும் ஆதரவை வாபஸ் பெறப் போவதில்லை...!''

- தஞ்சை தாமு

**ம**றுநாள் ஸர்தார் பவன் ஹோட் டலுக்குப் போனேன். மனோகரி மட்டும் அறையில் தனியாக இருந்தாள். அவள் தகப்பனார் என்னைப் பார்ப்பதற்காகத்தான் போயிருப்பதாகச் சொன்னாள். அன்றிரவு தன்னால் எனக்கு நேர்ந்த கஷ்டத்தைப் பற்றி வருத்தம் தெரிவித்தாள்.

''இது என்ன பிரமாதம்? சில நிமிஷ நேரம் உன் காதலனாக நடிக்கும் பேறு பெற்றேன் அல்லவா? அதற்கும் சில மணி நேரச் சிறைவாசத்துக்கும் சரியாய்ப் போயிற்று'' என்றேன்.

பிறகு அந்த ஒற்றை ரோஜாப்பூவை எடுத்து அவளிடம் கொடுத்தேன். அவள் அளவிலா அதிசயத்துடன் அதை வாங்கிக் கொண்டாள். தன் அழகிய கரமலரில் அந்தச் செயற்கை மலரை வைத்துக் கொண்டு அதை உற்றுப் பார்த்தாள்.

''உள்ளே வைரம் பத்திரமா யிருக்கிறது!'' என்றேன்.

''வைரம் இருப்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று மேலும் வியப்புடன் கேட்டாள்.

''பிரித்துப் பார்த்தேன்; தெரிந்தது'' என்றேன்.

''எப்படி இது உங்கள் கைக்கு வந்தது?''

''தூண் நிழலில் நின்று 'இந்தக் காகிதப்பூ எதற்கு? நிஜ ரோஜாப்பூ மாலை வாங்கித் தருகிறேன்' என்றாயே, அந்த இடத்திலேயே கிடந்தது. இதைக் கொடுக்க மாட்டேன் என்று சொன்னது நியாயந்தான்! ஒன்றரை லட்ச ரூபாய் வைரத்தை யார்தான் ஒரு அன்னியனுக்குக் கொடுப்பார்கள்?''

''விலை மதிப்பை முன்னிட்டு, கொடுக்க மறுக்கவில்லை. அவ்வளவு பெறுமானமுள்ளது என்பது அப்போது எனக்குத் தெரியவே தெரியாது. இதற்கு ஒரு உபயோகம் இருந்தது; அதனால்தான்

கொடுக்க மாட்டேன் என்றேன். அந்த உபயோகம், இனி இல்லாமற் போய் விட்டது''

''எனக்கு விளங்கவில்லை. உபயோக மில்லாமல் ஏன் போக வேண்டும்? இதில் உள்ள வைரம் உன் கழுத்தில் அழகாகத் தான் ஜொலிக்கும். ஆனால் சுங்கவரி மட்டும் கட்டிவிட வேண்டும்!'' என்றேன்.

அவள் என்னை ஏறிட்டுப் பார்த்து, ''எதற்காகச் சுங்கவரி கொடுக்க வேண்டும்? எனக்குக் கொஞ்சம் சட்டம் தெரியும். பெண்கள் அணிந்திருக்கும் நகைக்கு சுங்கவரி கிடையாது'' என்றாள்.

''அப்படியானால், ஏன் அதை ஒளித்துக் கொண்டு வரவேண்டும்?'' என்று முணுமுணுத்தேன்.

''என் தந்தை வைர வியாபாரி, என்னை வைர நகை போட்டுக்கொள்ளும்படி எத்தனையோ நிர்ப்பந்தித்திருக்கிறார். நான் மறுத்துவிட்டேன். இந்த ஒற்றை வைரத்தை மட்டும் எடுத்து வந்தேன். இவ்வளவு பெறுமானமுள்ளது என்று தெரியாது. நூறு ரூபாய் வைரமே என் காரியத்துக்குப் போதுமானதாயிருந்திருக்கும்!''

''அது என்ன அபூர்வமான காரியம்? இன்னும் அந்த மர்மம் எனக்கு விளங்கவில்லையே?'' என்று கேட்டேன்.

அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் மனோகரி என்னுடைய நிலைமையைப் பற்றி விசாரிக்கலானாள்.

''நான் கதாநாயகனாகத் தகுதியுள்ளவன் அல்ல; பி.ஏ. பரீட்சையில் 'கோட்' அடித்தவன்!'' என்றேன்.

''நிஜமாகவா? நீங்கள் பி.ஏ. பரீட்சை எழுதித் தோல்வி அடைந்தீர்களா?'' என்று கேட்டாள்.

''ஒரு தடவை மட்டுமல்ல, மூன்று தடவை பரீட்சைக்குப் போய்த் தோல்வியடைந்தவன்.''

''மூன்று தடவையா தோல்வியடைந்தீர்கள்?'' என்று கேட்டுவிட்டு மனோகரி விழுந்து விழுந்து சிரித்தாள். அதில் என்ன அவளுக்கு அவ்வளவு சந்தோஷம் என்பது எனக்கு விளங்கவில்லை.

''சரி சரி! நீ சிரித்து முடி. இன்னொரு நாள் வந்து பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

அவள் போக வேண்டாம் என்று தடுத்தும் நான் நிற்கவில்லை. ஆண்பிள்ளை அல்லவா? ரோஷமாயிராதா? திரும்பிக்கூடப் பார்க்காமல் போய்விட்டேன்.

''சின்ன வயசில் குருகுலத்துக்குப் போக மாட்டேன் என்று அடம் பிடிப்பாரே மன்னர், இப்போது எப்படி இருக்கிறார்?''
''போருக்குப் போக மாட்டேன் என்று அடம் பிடிக்கிறார்.''

- லஷ் ஜனா



**எ**ன் ஜாகைக்குத் திரும்பியபோது அங்கே மனோகரியின் தகப்பனார் காத்திருந்தார். அவரும் ஓர் அத்தியாயம் தெரிவிக்கார்.

# ஒன்றரை லட்சம் ரூபாய் வைரம் போனால் போகட்டும். பெண் பிழைத்தாளே அதுவே போதும்!



பேச்சின் நடுவில், ''என் மகளுக்கு நீங்கள் மிகவும் ஒத்தாசையாயிருந்தீர்களாம். டீ வாங்கிக் கொடுத்தீர்களாம். அவள் எனக்கு ஒரே பெண். அதனால் தான் ஒன்றரை லட்ச ரூபாய் வைரம் போனாலும் போகிறது, பெண் உயிரோடு பிழைத்தாளே, அதுவே போதும் என்று திருப்தி அடைந்திருக்கிறேன்!'' என்றார்.

''அவள் உயிருக்கு என்ன ஆபத்து வந்தது?'' என்று கவலையுடன் கேட்டேன்.

''தெரியாதா? இதோ பாருங்கள்!'' என்று சொல்லி ஒரு கடிதத்தை நீட்டினார். அது மனோகரி அவளுடைய தோழி ஒருத்திக்கு எழுதிய கடிதம். மனோகரி இலங்கையில் ஏதோ ஒரு பரீட்சைக்குப் போனதாகவும் அதில் தேறவில்லையென்றும் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது.

'பரீட்சை தேறாத அவமானத்தை என்னால் சகிக்க முடியாது. உயிரை விட்டுவிடத் துணிந்துவிட்டேன். இங்கேயே இருந்து அப்பாவுக்குத் துயரம் கொடுக்க விரும்பவில்லை. வைரத்தைப் பொடி பண்ணிச் சாப்பிட்டால், உடனே உயிர் போய்விடும் என்று சொல்கிறார்கள் அல்லவா? அப்பாவின் வைரம் ஒன்றை எடுத்துக்கொண்டு இந்தியாவுக்குப் போய் உயிரை விடுவது என்பதாகத் தீர்மானித்துவிட்டேன். என் உண்மையான சிநேகிதி நீ ஒருத்திதான். ஆகையால் உனக்கு மட்டும்...'

கடிதத்தை இதற்குமேல் நான் படிக்கவில்லை.

''ஐயையோ! என்ன காரியம் செய்து விட்டேன்'' என்று பதறி எழுந்தேன்.

''என்ன? என்ன?'' என்று மனோகரியின் தந்தையும் பதறிக் கொண்டு எழுந்தார்.

''வைரம் என்னிடந்தான் இருந்தது. இப்போதுதான் தங்கள் மகளிடம் போய்க் கொடுத்துவிட்டுத் திரும்பி வந்தேன்'' என்றேன்.

''அடப் பாவி! என்ன காரியம் செய்தாய்? என் குடியைக் கெடுத்துவிட்டாயே?'' என்றார் அந்தப் பெரியவர்.

அவர் கொண்டு வந்திருந்த 'டாக்ஸி'யில் ஏறிக்கொண்டு இருவரும் பறந்து சென்றோம்.

என் நெஞ்சு அந்தச் சில நிமிஷங்களில் எப்படித் துடித்தது என்று சொல்லவே முடியாது.

அந்த அழகிய பொன் மேனியைப் பிணமாகத்தான் காணப்போகிறோம் என்று எண்ணிப் பதைபதைத்தேன்.

ஆனால், என்ன சந்தோஷமான ஏமாற்றம்! ஓட்டலில் அவர்கள் தங்கியிருந்த அறைக்குச் சமீபமாகச் சென்றபோது அறைக்குள்ளிருந்து குதூகலமாகப் பாடும் குரல் கேட்டது.

உள்ளே நாங்கள் இருவரும் சென்று விழுந்தோம். எங்களுக்குத்தான் உயிர் போய்விடும் போலிருந்தது.

''வைரம் எங்கே?'' என்று இருவரும் ஒரே காலத்தில் கேட்டோம்.

மேஜையை அவள் சுட்டிக் காட்டினாள். அங்கே அது வானத்தில் ஒளிரும் நட்சத்தி




ரத்தைப்போல பிரகாசித்துக்கொண்டிருந்தது.

''எதற்காக இந்தப் பரபரப்பு?'' என்று கேட்டாள்.

''எங்கே இந்தக் கடிதத்தில் எழுதியிருப்பதுபோல் செய்துவிடுவாயோ என்றுதான்.''

''அதற்கு இனி அவசியம் இல்லையென்றுதான் இவரிடம் சொன்னேனே? இந்த மனிதர் மூன்று தடவை பி.ஏ. பரீட்சையில் தோல்வியடைந்துவிட்டு இவ்வளவு உற்சாகமாக இருக்கிறார்; ஒரு தடவை தோற்றதுக்காக நான் ஏன் உயிரை விட வேண்டும்?'' என்றாள் மனோகரி.

ஆரம்ப அதிர்ச்சி, மகிழ்ச்சி எல்லாம் ஒருவாறு அடங்கிய பிறகு, மனோகரியின் தகப்பனார், ''இந்தப் பெண்ணைச் சமாளிக்க இனி என்னால் முடியாது. நீர்தான் இவள் உயிரைக் காப்பாற்றினீர். இனியும் இவளை நிர்வகிக்கும் பொறுப்பை நீர்தான் ஏற்கவேண்டும்'' என்றார்.

''கடவுளே! என்னால் எப்படி அது முடியும்? இந்நாளில் பசிக்கு அரிசி கிடைப்பதே துர்லபமாயிருக்கிறது. நானோ ஏழை, இவளுடைய பசிக்கு வைரம் எப்படி வாங்கிக் கொடுப்பேன்? அதுவும் ஐம்பது ரூபாய், நூறு ரூபாய் வைரமா? ஒன்றரை லட்ச ரூபாய் வைரங்களுக்கு நான் எங்கே போவேன்?'' என்றேன்.

மனோகரியின் தகப்பனார் இப்போதுதான் முதல் தடவையாகக் கடகடவென்று சிரித்தார்; ''நான் கூட வைர வியாபாரத்தை விட்டுவிடப் போகிறேன். இந்தப் பெண் இருக்குமிடத்திலேயே வைரம் வைத்திருக்கப்படாது!'' என்றார்.

எங்கள் திருமணத்தின்போது மனோகரி தன் வாக்குறுதியை நிறைவேற்றினாள். மணமுள்ள புது ரோஜா மலர்களால் கட்டிய மாலையை என் கழுத்தில் சூட்டினாள்.

மனோகரி வைர நகை மட்டும் அணிவதில்லை. எங்கள் வீட்டிலேயே வைரம் வைத்துக்கொள்வதில்லை. எதற்காக அத்தகைய விஷப் பரீட்சை பார்க்க வேண்டும்?

என்ன கேட்கிறீர்கள்? ''பி.ஏ. பரீட்சை என்ன ஆயிற்று?'' என்று கேட்கிறீர்களா? எங்கள் திருமணம் நடந்தவுடனே முதற் காரியமாகப் பாபநாசத்துக்கு மறுபடியும் போனோம். அங்குள்ள இனிய நதி வெள்ளத்தில் இருவரும் கைகோத்துக்கொண்டு இறங்கி, எல்லாப் பரீட்சைகளுக்கும் சேர்த்து முழுக்குப் போட்டோம்.

நதிக்கரை மரங்களில் வாழ்ந்த பட்சிகள், எங்கள் செயலை ஆமோதித்து மங்கள கீதம் பாடின.

(முற்றும்)

# நீங்கள் கேட்டவை -தராசு

## மீண்டும் விவசாயக் கடன் தள்ளுபடியாகியுள்ளதே?

● த. புகழேந்தி, கூகூர் *

? விவசாயக் கடன் தள்ளுபடி மீண்டும் 11,600 கோடி ரூபாய்க்கு மத்திய அரசு அறிவித்துள்ளதே?

! நவீன சாகுபடி முறைகளையும் தன்னிறைவு விவசாயத் திட்டங்களையும் உருவாக்காமல், கடனை மட்டும் தள்ளுபடி செய்வது, எந்த வகையிலும் நாட்டுக்குப் பயன் தராது. உள்ள கடன் தீர்ந்துவிட்டதால் புதிய கடன் பெறுவார்கள். ஓரிரு ஆண்டுகளில் மறுபடி கடன் தள்ளுபடி செய்ய நேரும். பொது மக்கள் மீதுதான் எல்லா கடன் சுமைகளும் ஏறும்.

●வாசுதேவன், நவி மும்பை

? நமது நாட்டில்தான் கல்விக்காக அதிகமான கடன் கொடுக்கப்பட்டுள்ளதாக நிதியமைச்சர் அறிவித்துள்ளாரே?

! இதில் பெருமைப்பட்டுக்கொள்ள ஒன்றுமில்லை. பல முன்னேறிய நாடுகளில், நாம் அளித்த கடன் தொகையைக் காட்டிலும் பல மடங்கு, உதவித்தொகையும் மானியமும் உயர் கல்விக்கு வழங்கப்படுகின்றன.

● என்.சண்முகம், திருவண்ணாமலை

? 'பெட்ரோல், டீசல் விலை உயர்வைச் சமாளிக்க, பொதுமக்கள் பஸ், ரயில்களைப் பயன்படுத்த வேண்டும்' என்கிறாரே ப.சிதம்பரம்?

! அப்படியானால், எதற்காக இவ்வளவு கார்களும் ஸ்கூட்டர்களும் உற்பத்தி செய்யும் புதுப்புதுத் தொழிலகங்களுக்கு, நம் நாட்டில் சமீப காலமாக அனுமதி கொடுத்து வருகிறார்கள்? மக்களிடம் ஆசையை வளர்க்கிறார்கள்? இந்தக் கொள்கை முரண்பாடு ஒரு புறமிருக்க, மக்கள் பொதுப் பிரிவு வாகனங்களைப் பயன்படுத்த வேண்டுமானால், அவற்றின் வசதியும் சேவைத் திறனும் இன்னும் பல மடங்கு உயர்ந்தாக வேண்டும்.

● எஸ்.ப்ரியதர்ஷினி, திருநெல்வேலி-7

? கோடையில் உங்கள் தாவுக்கு இன்பம் தரும் பானம் எது?

! இள 'நீர்' மோர்!

● கே.மோகனசுந்தரம், திருநெல்வேலி ☐

? அப்பாவி மக்கள் குண்டு வெடிப்பில் பலியாவதில் தீவிரவாத அமைப்புகளுக்கு என்ன லாபம்?

! லாபம் 1: மதத்தின் பெயரால்

* கொள்கை முரண்பாடு!



* பாராட்டுத் தட்டு!



* டபுள் கேலிக் கூத்து!

! அப்புறம் மனத்தை மாற்றிக்கொண்டு, புதுக் கட்சி பற்றி அறிவிக்கப் போவதாகச் சொல்லியிருப்பது, கேலிக்கூத்திலும் கேலிக்கூத்து!

● என்.பாலகிருஷ்ணன், மதுரை

? 'இரண்டு ரூபாய்க்கு அரிசி சரி; ஆனால், இரண்டு கரண்டி குழம்பு வைக்க இருபத்தைந்து ரூபாய் செலவாகுதே!' என்று விஜயகாந்த் கேட்கிறாரே?

! அட, சும்மா இருங்க பாலகிருஷ்ணன்! யாராவது அடுத்த தேர்தல் அறிக்கையில் இலவச குழம்பு பாக்கெட் அறிவித்துவிடப் போகிறார்கள்!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

? மணல் குவாரிகளை மீண்டும் தனியார்வசம் ஒப்படைக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளதே?

! இந்தத் தவறான முடிவைத் தீவிரமாக எதிர்த்து, மாற்றிக்கொள்ளச் செய்த கூட்டணி கட்சிகளுக்கு ஷொட்டு! முடிவெடுக்க அனைத்துக் கட்சிக் கூட்டம் போட்ட போது, அதில் பங்கேற்காமல் பாய்க்காட் செய்த கட்சிகளுக்குக் குட்டு! கௌரவம் பாராமல் முடிவை மாற்றிக்கொண்ட தமிழக அரசுக்குப் பாராட்டுத் தட்டு!

● வெ.ராம்குமார், வேலூர்

? 'பா.ஜ.க. மதவாத கட்சியா என்று எனக்குத் தெரியாது' என்று விஜயகாந்த் கூறுகிறாரே?

! நெருங்கி வரும் நாடாளுமன்றத் தேர்தலில் வாக்காளர் ஆதரவுக் காற்று, எந்தப் பக்கம் வீசுதுன்னு கணிக்கறாருன்னு அர்த்தம்.

செய்யப்படும் கொலை என்பதால், தங்களுக்குக் கடவுள் அருள் செய்வார் என்கிற அவர்களுடைய மாயையான நம்பிக்கை.

லாபம் 2: அச்சத்தை எங்கும் பரப்பி, அரசு பேரில் மக்களுக்கு நம்பிக்கையற்றுப் போகச் செய்வது.

லாபம் 3: மதங்களிடையே துவேஷத்தை வளர்த்து, வகுப்புக் கலவரங்களுக்கு வழிவகுப்பது!

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? தம்மைக் கட்சியிலிருந்து நீக்கிவிட்டதால், அரசியலிலிருந்து விலகப் போவதாக நடிகர் கார்த்திக் சொல்லியிருப்பது கேலிக்கூத்தான விஷயம்தானே?

☐ ரூ. 100 பரிசு பெறுபவர்:
கே.மோகனசுந்தரம்,
திருநெல்வேலி

* வெளிச்சமான வேதனை!



● பி.செந்தில்வேலன், அறந்தாங்கி

? தி.மு.க. - பா.ம.க. உறவு அடுத்த ஆண்டு நடைபெறவுள்ள பாராளுமன்றத் தேர்தலிலும் தொடரும் வாய்ப்பு உள்ளதாக நினைக்கிறீர்களா?

! நாடாளுமன்றத் தேர்தலில் தொடரும். அதன் பலாபலன் அடிப்படையில் சட்டமன்றத் தேர்தல் கூட்டணி அமையும்.

● ஈ.கார்த்திக், திருநெல்வேலி

? கடவுள் மனிதனைப் படைத்தானா? இல்லை, மனிதன் கடவுளைப் படைத்தானா?

! இயற்கை மனிதனைப் படைத்தது. நன்றியுள்ள மனிதன் இயற்கையை வணங்கினான். பிறகுதான் தெரிந்தது, இயற்கையின் மறுபெயர் கடவுள் என்று.

● ச.ஆ. கேசவன், இனாம் மணியாச்சி

? ஆசிரியரை நினைவுபடுத்தும் பஞ்சகச்சம், தலைப்பாகை, பிரம்பு எங்கே போயின?

! 'மாறும்' என்ற சொல்லைத் தவிர, மற்றவை எல்லாம் மாறக்கூடியவை என்பதைக் கேள்விப்பட்டதில்லையா கேசவன்!?

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்

? உணவு வகைகளின் விலையைக் குறைக்க, ஹோட்டல் உரிமையாளர்கள் சம்மதித்துள்ளதாகச் செய்திகள் தெரிவித்தன. ஆனால், விலைகள் குறைக்கப்படவில்லையே?

! கன்யூட் என்று ஓர் அரசன், கடற்கரைக்குப் போய், 'அலைகளே! பொங்கி வருவதை உடனே நிறுத்துங்கள்!' என்று உத்தரவு போட்டானாம்! அதைப் போல்தான் சில அமைச்சர்கள் ஹோட்டல் முதலாளிகளை அழைத்துப் பேசியதும். சமையல் பண்டங்களின் விலை குறைந்தால் தானே உணவு வகைகளின் விலை குறையும்? அதான் உச்சத்தை அடைந்துவிட்டதே!

● பி.மகேஷ், திருச்சி

? திருப்பதி கோயில் தரிசன டிக்கெட் விற்பனையில் 'கோல்மால்' செய்ததற்காக இரண்டு ஊழியர்களை தேவஸ்தானம் சஸ்பெண்ட் செய்துள்ளது எனும் செய்தி பற்றி...?

! கவலைப்படாதீங்க! நமது அரசியல்வாதிகள் வழிகாட்டலில் கூடிய சீக்கிரம், கோல்மாலுக்கே கோயில் கட்டிக் கும்பிடுற காலம் வரும்!



* காற்றுக்காகக் காத்திருந்து...



* கூட்டணி வாய்ப்பு

✱ ரூ. 50 பரிசு பெறுபவர்:

த.புகழேந்தி,

கூகூர்



* பாலகுருசாமி



* கே.பி.நடேசன்



# இன்னொரு

இதோ இன்னொரு உத்தப்புரம் என்று சொல்லும் அளவுக்கு அதே சுற்றுச்சுவர் பிரச்னை. எங்கே? சேலம் மாவட்டம் ஆட்டையம்பட்டியில். ஏன் இந்தச் சுற்றுச்சுவர்? அங்கே என்னதான் நடக்கிறது? கேள்விகளோடு களத்தில் இறங்கினோம்!

‘‘கடந்த பத்து வருஷமா 'ரிசர்வ்' ஊராட்சியாதான் இருந்தது. இப்ப நடந்த ஊராட்சி மன்றத் தேர்தல்லதான் பொது ஊராட்சியாக மாறியது எங்க ஊர். அப்பவும் எங்களோட முன்னாள் தலைவி லில்லியோட கணவர் தேர்தல்ல நின்னார். கவுண்டர் சமூகத்திலிருந்து கே.பி.நடேசன், அருந்ததியர் வோட்டுகளை வாங்கி ஜெயிச்சுட்டாரு. அதுக்கு அப்புறம்தான் இந்தக் கோயிலைக் கொஞ்சம் பெரிசா கட்டி கும்பாபிஷேகம் செஞ்சாங்க. அதோட நிறுத்தியிருந்தா எந்தப் பிரச்னையும் இல்லே. கோயிலுக்கு காம்பவுண்ட் சுவர் கட்டியதுதான் பிரச்னைக்குப் பிள்ளையார் சுழி'' என்கிறார் ஆதிதிராவிட சமூகத்தைச் சார்ந்த மாதேஸ்வரன்.

‘பெரிய மாரியம்மன் கோயில் எதிரே மட்டும்தான் திடல்னு சொல்லிக்கறாப்ல காலியிடம் இருக்கு. அங்கதான் ரெண்டு பிரிவு மக்களும் கலை நிகழ்ச்சி, பொங்கல் விழா, வழுக்கு மரம் ஏர்றது, கபடிப் போட்டின்னு வெவ்வேற நாட்கள்ல பல வருஷங்களா நடத்துறது வழக்கம். இப்ப இவங்க அந்தக் காலியிடம் முழுசையும் கவர் பண்ணி, கோயிலை மையமாகக் கொண்டு காம்பவுண்ட் சுவர் கட்டிட்டா, எங்க சனங்க கலை நிகழ்ச்சி, பொங்கல் விழா எல்லாம் எங்க நடத்துவாங்க? சொல்லுங்க!'' எனக் கேட்கிறார் தி.மு.க. வார்டு பிரதிநிதியான கோவிந்தன்.

‘‘கோயில் பாதுகாப்பா இருக்கணும்; அதன் சுற்றுப்புறம் சுத்தமா இருக்கணும். அதுக்குத்தான் இந்தக் காம்பவுண்ட் சுவர். ஆதிதிராவிடர்கள்தான் இந்த ஊர்ல ஆயிரம் பன்றிகளுக்கும் மேல் வளர்க்கறாங்க. பன்றிகள் கோயிலை அசிங்கப்படுத்தி வெச்சுடுது. ஆண்களும் குடிச்சிட்டு வந்து கோயில் முன்னால் படுத்துக்கறாங்க. இதெல்லாம் இந்த ஊர்ல இதர சமூகத்தைச் சார்ந்த ஆளுங்களால எதிர்த்துக் கேட்க முடியாது. காரணம், இருக்கவே இருக்கு பி.சி.ஆர் வழக்கு.

இது போன்ற சமூகப் பிரச்னைகளுக்கு என்ன தீர்வு? சொல்கிறார் உ.ரா.வரதராஜன். உத்தப்புரம் போன்ற பிரச்னையுள்ள ஊர்களில் அடிப்படையான காரணங்களைக் கண்டறிந்து களைய வேண்டும். இரண்டாவது வாழ்வாதாரம் சார்ந்து எழக்கூடிய சின்னச் சின்னக் கஷ்டங்களைப் போக்க வேண்டும். பொருளாதார ரீதியாக உயர்ந்த நிலையில் இருப்பவர்கள், தாழ்ந்த நிலையில் உள்ளவர்களை ஒடுக்க நினைக்கக்



# உத்தப்புரம்?



* சக்திவேல் முருகன்



* ஆறுமுகம்

டவுன்ல போயி எங்க ஊரைச் சொன்னா, 'பன்னி வளர்க்கறாங்களே அந்த ஊர் தானே?'ன்னு கேக்கறாங்க. கோயிலோட தூய்மைக்காகவும், அமைதிக்காகவுமே இந்த காம்பவுண்ட் சுவர். அதையும் தடுத்து நிப்பாட்டிட்டாங்க!'' என்கிறார் வக்கில் சக்தி வேல் முருகன்.

''பன்றிகள் வளர்க்கறது எங்க பரம்பரைத் தொழில். பல வருஷமா இல்லாத காம்பவுண்ட் சுவரு இப்ப எதுக்கு? அந்தக் காலியிடத்தை மொத்தமா வளைச்சுப் போட்டு, கோயில் காம்பவுண்ட் கட்டிட்டா, இந்த ஊர்ல எங்க சனங்களால எந்த விழாவும் நடத்த முடியாது. இது எங்களை ஒரு வகையில் ஒடுக்கற மாதிரிதானே?'' என்று வெடிக்கிறார் ஆறுமுகம்.

கூடாது. சாதி ஒழிப்புப் போராட்டம் சாதிய மோதல்களுக்கு வழிவகுக்கக் கூடாது! அரசு மற்றும் பொது நல இயக்கங்கள், பிற்படுத்தப்பட்ட சமூகத்துக்கும் தாழ்த்தப்பட்ட சமூகத்துக்கும் மன நெருக்கத்தை ஏற்படுத்தும் சிறப்பு கிராம சபை கூட்டங்களை நடத்த வேண்டும்!

– சிவக்குமார்

* உ.ரா.வரதராஜன்



''எந்தப் பிரிவினரையும் தனிமைப்படுத்தவோ, ஒடுக்கி வைக்கவோ இந்தச் சுற்றுச்சுவர் எழுப்பிட எண்ணவில்லை. கோயிலுக்கான சுற்றுச் சுவர்தானே தவிர, உத்தப்புரம் போல இது ஒன்றும் தடுப்புச் சுவர் அல்ல. 'ரிசர்வ்' ஊராட்சியாக இருந்த போது, கோயிலின் ஐம்பது சென்ட் இடத்தில் பெரும் பகுதியை ஆதி திராவிடர்கள் ஆக்கிரமித்து வீடுகளாகக் கட்டிக்கொண்டார்கள். தற்போது எஞ்சியிருக்கும் பதினெட்டு சென்ட் இடத்தில் கோயிலுக்கான சுற்றுச் சுவர் எழுப்ப இருந்ததை, ஊர் ஆதிதிராவிடர்கள் மாவட்ட நிர்வாகத்தின் கவனத்துக்குக் கொண்டு சென்று தடுத்து, நிறுத்தி வைத்துள்ளனர்!'' என்கிறார் ஆட்டையம்பட்டி ஊராட்சி மன்றத் தலைவர் கே.பி. நடேசன்.

''பிரச்னை மாவட்ட நிர்வாகத்தின் பார்வைக்கு வந்த உடனே, நாங்கள் கிராமத்துக்குச் சென்றிருந்தோம். பதினெட்டு சென்ட் இடத்தில், சுற்றுச் சுவர்க்கான அஸ்திவாரம் மட்டும் போட்டிருந்தனர். சுமுகத் தீர்வு காணும் வரை, சுற்றுச்சுவர் எழுப்ப வேண்டாமென கோயில் நிர்வாகிகளுக்கு உத்தரவிட்டோம். இரு தரப்பிலும் பேச்சு வார்த்தைக்குக் குழுவினரை நியமித்தோம். பீஸ் கமிட்டி கூட்டத்துக்கும் தேதி குறிப்பிட்டிருந்தோம். 'இதை மீறி சுவர் எழுப்பும் திட்டம் இல்லை' என்று கோயில் நிர்வாகத்தினர் தெரிவித்துள்ளனர். அதனால் சமாதானக் கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டுள்ளது!'' என்கிறார் சேலம் ஆர்.டி.ஓ. பால குருமூர்த்தி.

செய்தியும் சித்திரங்களும்:
இந்திரா மணாளன்



"போன வாரம் வெளியே போன என் பொண்டாட்டிய காணலை சார்?"

"ஒரு வாரமா என்னய்யா செஞ்சுக்கிட்டிருந்தே?"

"ரொம்ப சந்தோஷமா இருந்தேன் சார்!"

- க. பாலசுப்பிரமணியன்

**தலைவர்:** எப்பப் பார்த்தாலும் ஊழல் பண்றோம்; லஞ்சம் வாங்கறோம்னு நம்மைக் குறை சொல்லிக்கிட்டிருக்கற எதிர்க்கட்சித் தலைவரைத் தாக்கி, பதிலுக்கு நாமும் அறிக்கை கொடுக்கணும்.

**தொண்டர்:** கொடுத்துடலாம் தலைவரே! வேல் கம்பாலா... அரிவாளாலா... எதால தாக்கணும்னு மட்டும் சொல்லிடுங்க.

- அரிசி ஸ்ரீராம்





"தோசை ஏன் வாத்து ஷேப்ல இருக்கு!"

"நீங்கதானே தோசை வாத்துத் தரச் சொன்னீங்க?"

- லீலாஜி

''அந்த அமைச்சர் சரியான ஞானசூன்யமா இருக்காரப்பா.''

''என் அப்படிச் சொல்றே?''

''தலைவரை, காக்கா பிடிக்கணும்னு அவரோட கொள்ளுப் பேரனைப் பார்த்து, **'முதல்வர் வேட்பாளர் நீடூழி வாழ்க!'**ன்னு கோஷம் போடறாரே!''

- சீர்காழி வி.ரேவதி





''நீ ஓட்டல்காரர் மகனா?''

''எப்படி சார் கண்டு பிடிச்சீங்க?''

''அதான் தெரியுதே! 'நெடுநல் வாடை'ன்னு எழுதச் சொன்னா, 'நெடுநாள் வடை'ன்னு எழுதுறியே!''

- சி.ஆர்.நாகராஜன்

# ''நீ ஓட்டல்காரர் மகனா?''

''வயல்ல 'காய்ஞ்ச பயிரை' வெச்சிருந்ததுக்காக, குப்பனை போலீஸ்ல புடிச்சிட்டாங்களாமே!''

''நீ வேற, அவன் வயல்ல 'கஞ்சா பயிரை'ல்ல வெச்சிருந் தான்!''

- வெ.சீதாராமன்



வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்



# கேச நறுமணம்;

வானமாமலை தெய்வநாயகப் பெருமாள் கோயிலில் இராப்பத்து மண்டபம். பூமிப் பிராட்டியுடைய அவதாரமான ஆண்டாள் சன்னிதி இந்த மண்டபத்தையொட்டி அமைந்திருக்கிறது. பத்து நாட்கள் இராப்பத்து உத்ஸவத்திலே, இந்த மண்டபத்தில்தான் பெருமாள் எழுந்தருள்கிறார். ஒரு பக்கத்திலே ஸ்ரீதேவி நாச்சியார், பூமிப் பிராட்டியார், அடுத்தாற்போல் ஸ்ரீவரமங்கைத் தாயார், மறு பக்கத்திலே ஆண்டாள் என்று இத்தனை நாச்சிமார்களுடன் தர்பாரில் ராஜாவைப் போல் பெருமான் ஸேவை சாதிக்கிறார்.

நம்மை நாமே பார்த்துக்கொள்ள வேண்டுமென்றால் கண்ணாடியில் கண்டு கொள்கிறோம். பெருமாள் தன்னைப் பார்த்துக்கொள்ள இந்தச் சாதாரண கண்ணாடி தகுமா! வேதமேதான் அவன் அழகையும் பெருமையையும் காட்டவல்ல கண்ணாடி. அந்த வேதங்களெல்லாம் ஓர் உருக்கொண்டவர்தான் கருடன். அதனால்தான் எல்லா சன்னிதிகளிலேயும் அவர் பெருமான் முன் நிற்கிறார். கூப்பிய கையோடு இருப்பார்.

ஆனால், வானமாமலை கருடன் தவம் செய்யும் கோலத்தில் இருக்கிறான். எதற்காகத் தவம் புரிந்தான்...? ஒருமுறை கருடன் நாகலோகத்துக்குச் சென்றான். அங்கிருந்த நாகங்கள் எல்லாம், "என்ன இருந்தாலும் நீ வெளியே இருப்பவன்தானே! பெருமாள் எப்போதாவதுதானே உன் மீது ஆரோகணிப்பார்! எங்கள் தலைவன் ஆதிசேஷனிடத்திலே அவர் எப்போதும் விட்டுப் பிரியாமல் இருக்கிறாரே!" என்று இகழ்ந்தன. கருடனுக்குக் கோபம் வந்தது. கோபமே செயல்வடிவாக உருவெடுத்தது. தோதாத்ரி திருத்தலத்துக்கு வந்து தவம் இயற்றினார். அதனால்தான் இத் திருத்தலத்திலே மட்டும் தவமியற்றும் கோலத்தில் இருக்கிறார்.



கருடனின் தவத்தை மெச்சிய எம்பெருமான், நமக்கு நீதான் வாகனமாக இருந்து எழுந்தருளப் பண்ணி, எல்லா அடியார்களுக்கும் எடுத்துச் சென்று காட்டுகிறாய். பெருமானை ஸேவிக்க வேண்டும் என்று ஆசைப்படுவோருக்கு, 'இதோ பரம்

# பாத தரிசனம்!

கண்ணனைத் தேடி... 7

பொருள்' என்று காட்ட வேண்டுமல்லவா, அந்த முக்கிய கைங்கர்யத்தைத் தரு கிறேன்'' கருடனுக்குக் கொடுத்தார்.

இந்த வானமாமலை திருத்தலத்திலே கருட வாகனத்துக்கு ஓர் ஏற்றம். நித்ய திருவாராதனம், பூசனை கருடனுக்கு நடக் கிறது.

இன்னொரு சிறப்பு இந்தத் திருத்தலத் தில் நித்தியப்படி நடக்கிற எண்ணெய்க் காப்பு! உள் பிராகாரத்தில், நைமிசாரண் யத்து ரிஷிகள் அத்தனை பேரும் இருக் கிறார்கள். அவர்களுள் வினதன் என்கிற மஹாகுரு பிரதானமாக எழுந்தருளியிருக் கிறார். இதையொட்டியுள்ள கர்பக்கிருஹத் திலே நடுநாயகமாக பெருமாள் இருக் கிறார். தினமும் நிறைய, கை கையாக எண்ணெய் சாற்றிக் கொள்கிறார். இது போதாதென்று ஆண்டுக்குப் பலமுறை ஒரு கோட்டை எண்ணெய்க் காப்பு உத்ஸவம் வேறு நடக் கிறது - சுமார் 208 லிட்டர் எண்ணெய் அப் போது சாற்றப்படுகிறது! இந்த உத்ஸவத் தின்போது பெருமாள் கருட வாகனத்திலும் தாயார் ஹம்ஸ வாகனத்திலும் எழுந்தருள் கிறார்கள். ஆண்டாள் கிளி வாகனத்தில் எழுந்தருள்கிறாள்.

பெருமான் தினப்படி எண்ணெய் சாற்றிக்கொள்வதாலே, இந்தக் கோயிலுக் குள் மிளகாயே வர முடியாது! என்ன திருவமுது பண்ணினாலும் மிளகுதான்! புளியோதரை பண்ணினாலும் மிளகுதான். குழம்பு பண்ணினாலும் மிளகுதான். எண் ணெய் சாற்றி நீராடிய பெருமானுக்கு மிள காய் சேர்த்தால், திருமேனிக்கு நோவு வரு மாம்! இந்தப் பரிவான பக்தி நம்மை வியக்க வைக்கிறது!

எண்ணெய்க் காப்பு உத்ஸவம் வழக்

கத்துக்கு வரக் காரணம் சுவையானது. காதி என்ற அரசனின் ஸ்வப்பனத்தில் பெருமாள் எழுந்தருளினார். ''நான் பூமிக்குள் இருக்கிறேன். என்னை வெளியிலே எடுத்துக் கோயில் நிர்மாணம் பண்ணி பராமரித்து வருவாய்'' என்று சொன்னான். பெருமாள் அடையாளமிட்ட சேற்றுத் தாமரைக் குளத்தில் ராஜா தேடச் செய்தான். (ஒரு காலத்தில் இவ்வூர் முழுவதுமே சேற்றுத் தாமரைக் குளமாகத்தான் இருந்தது.) தேடுகையில், எறும்புகள் வரிசையாக ஒரு மூலையிலே ஊர்ந்து போவதைப் பார்த்தான். அந்தப் புற்றிலே தோண்டியபோது எம்பெருமானுடைய திருமுடியிலே ஓர் ஆயுதம் பட்டு, ஒரு சொட்டு ரத்தம் தெளித்தது! அபசாரப்பட்டதற்காகப் பதறினான் ராஜா. கிழேயிருந்த தோதாத்ரி நாதனை மேலே கொண்டு வந்ததும் அவன் திருவடியிலே விழுந்து வணங்கி, ''அடியேனுக்குத் தண்டனை கொடுக்க வேண்டும்'' என்றான். எம்பெருமான் திருவுள்ளம் உகந்து, ''சிறிது எண்ணெய் எடுத்து வா. அதை என் தலையிலே தேய்த்துக் கொண்டால் ரத்தமும் நின்று போகும், வலியும் ஆறிப் போகும்'' என்று சொல்ல, அன்று தொடங்கி இன்றளவும் திருமுடியிலே (கேசத்திலே) எண்ணெய் தேய்த்துக் கொள்கிறார் தெய்வநாயகப் பெருமாள்!

கேசவன் என்றே பெயர் ஆயிற்றே பெருமாளுக்கு! அவனுடைய திருக்குழல் கற்றையைப் பற்றிப் பாடாதோர் இல்லை. அது கண்டு மையல் கொள்ளாதோர் இல்லை! 'மைவண்ண நறுங் குஞ்சி குழல் பின் தாழ' என்று திருமங்கையாழ்வார் பாடியபடி நறுமணம் கமழும், குஞ்சிக் குழலிலே தினப்படிக்கும் காலை எண்ணெய் சாற்றிக்கொள்கிறார் பெருமான்! அந்த எண்ணெயே பாத்திரங்களில் எடுக்கப்பட்டு இங்கேயுள்ள எண்ணெய்க் கிணற்றிலே சேர்க்கப்படுகிறது. பிரசாதமாகவும் அளிக்கப்படுகிறது. எம்பெருமானைக் கண்டெடுத்த சேற்றுத் தாமரைக் குளம் இன்னமும் இருக்கிறது. அதில் மட்டும் நீர் நிரம்பினால் கடல் போல் ஆர்ப்பரிக்கும் அளவுக்குப் பெரியது!

*'சேற்றுத்தாமரை செந்நெல் ஊடு மலர்*
*சிரீவர மங்கல நகர்*
*வீற்றிருந்த எந்தாய்!'*

என்றே ஆழ்வார் பிரார்த்திக்கிறார். இந்த எண்ணெய் தேய்த்துக்கொண்டு, சேற்றுத் தாமரைக் குளத்திலே நீராடினால் எல்லா நோய் களும் பறந்தோடாதா!



* சடாரியில் நம்மாழ்வார்

ஸ்ரீவர மங்கல நகருக்கு தோதாத்ரி என்று ஏன் பெயர்? 'துததி' என்றால் போக்குகிறான் என்று பொருள். 'அத்ரி'

## நாம் பெருமானைத் தரிசித்தவுடன், அவரின் பாதுகையான சடாரியையே நம் தலையில் வைக்கிறார்கள்!

என்றால் மலை. இவ்வூரில் இருக்கக்கூடிய எம்பெருமான் நம் பாபங்கள் அத்தனையையும் போக்குபவன். மலையைப் போன்று நெடிதுயர்ந்து, அசையாத தன்மையும் திண்மையும் இருக்கிறபடியால் அவனையே அத்ரி என்று சொல்லலாம்! ஆக, அவனுக்குத்தான் தோதாத்ரி என்று பெயர்; அவனுக்குத்தான் வானமாமலை என்று பெயர். வடமொழியில் இவ்வூருக்கு 'ககனகிரி' என்று பெயர். வானத்தளவு உயர்ந்திருக்கிற மலைகள் பெற்ற ஊர் என்று பொருள். வானளவுக்கு உயர்ந்த புகழ் பெற்ற பெருமான் என்றும் கொள்ளலாம்! மலையே அவன் - அவனே மலை என்பதால், அவன் இருக்கும் இடத்தை ஸேவித்தாலும் பாபம் போகும்; அவனையே ஸேவித்தாலும் பாபம் தொலையும்!

நாங்குனேரி என்றும் இத்திருத்தலத்துக்குப் பெயர் உண்டு என்று பார்த்தோம். நான்-கூன்-ஏரி. நான் என்பது நான்கு என்கிற எண்ணைக் குறிக்கும். கூன் என்றால் வளைவு. நான்கு பக்கங்களிலும் வளைந்திருக்கிற ஏரியை உடைய ஊர். இதுவே மருவி மருவி நாங்குனேரி ஆயிற்று.

இந்த நாங்குனேரியிலே, தோதாத்ரியிலே, ஸ்ரீவர மங்கல நகரிலே, வானமாமலையிலே, பகவான் வானத்திலே (வைகுண்டத்திலே) எழுந்தருளியிருப்பது போலவே வாசுதேவனாக காட்சி தர, அவன் திருவடியின் அடையாளமான சடாரியில் அமர்ந்திருக்கிறார் நம்மாழ்வார்!

*'நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்*
*உனக்கொரு கைமாறு நான்*
*ஒன்றிலேன்*
*எனதாவியும் உனதே'*

என்று பெருமானின் பாதத்துக்கே பாசுரம் பாடியவர் அந்தப் பாதங்களிலே நிரந்தரம் தஞ்சமாகி காட்சி தருகிறார். நம்மாழ்வாரே சடாரி. நாம் பெருமானைத் தரிசித்தவுடன் பெருமானின் பாதுகையான சடாரியையே நம் தலையில் வைக்கிறார்கள்.

''உனக்கு நான் ஒரு கைம்மாறு செய்ய முடியாது. இந்த ஆத்மாவைக் கொடுக்கலாம் என்றால் அதுவும் உன்னுடையது தானே...! உன் ஆனந்தத்துக்காக, உன் திருவடியிலே நீயல்லவோ அதனைச் சமர்ப்பித்துக்கொண்டாய்'' என்று தெய்வநாயகப் பெருமானிடத்திலே சரணாகதி அனுஷ்டித்துக்கொண்டார்.



நம்மாழ்வார் வடிவத்தினை ஏந்திய அந்த சடாரியை ஸேவிப்பதும் அதனை நம் தலையிலே சாதிக்கப் பெறுவதும் அந்த உயர்ந்த சரணாகதியின் ஒரு துளியை நமக்குக் காட்டித் தரும் உயர்ந்த அனுபவம்.

**(தேடுவோம்)**

படங்கள்: **ஸ்ரீஹரி**
சித்திரம்: **வேதா**



சேன். ஒவ்வொரு முறையும் தூங்கும்போது பெரிய மலையிலேர்ந்து உருட்டிவிடற மாதிரி கனவு வருமாம். உடனே அலறித் துடிச்சு எழுந்திருச்சுடுவாங்க. அதுவும் கரெக்டா ஒன்பது மணி ஆகிட்டாப் போதும், தலையில இடி விழற மாதிரி வலி ஆரம்பிச்சுடும். இதுக்கு clock-like periodicity என்று பெயர். மகாலட்சுமியின் மனச்சிக்கலுடன் உடல் துன்பத்துக்கும் சேர்த்துதான் மருத்துவம் செய்தோம். சில நாட்களிலேயே அந்தக் கனவும் போய்டுச்சு; தலைவலியும் போய்டுச்சு.

ஹோமியோபதி மருத்துவம் ஜெர்மனியில் பிறந்து பல நாடுகளில் மிகச் சிறப்பாக வளர்ந் துக்கிட்டு வர்ற ஒரு மாற்று மருத்துவ முறை.

ஏற்கெனவே வலியோடும் வேதனையோடும் வரும் நோயாளிகளை, ஊசியால் குத்தி, கசப்பான மாத்திரை கொடுத்துக் கஷ்டப்படுத்துவதில்லை. மாத்திரை மருந்துகளுக்கு எக்ஸ்பயரி டேட் இல்லை. பொருளாதார ரீதியாகவும் மக்களுக்கு அதிக சிரமம் தராததா இருக்கும். அதைவிட ஒரு முக்கியமான விஷயம், அலோபதி மருந்துகளைத் தயாரித்த பிறகு எலி, தவளை போன்ற விலங்குகளுக்குச் செலுத்திப் பரிசோதனை செய்த பிறகுதான், மனிதருக்குக் கொடுக்கப்படும். இப்படிச் செய்யும்போது மனத்தளவில் ஏற்படும் பிரச்னைகளை அந்த விலங்குகள் எப்படிச் சொல்லும்? ஆனால், ஹோமியோபதியில் நேரடியாக மனிதனுக்கே மருந்தைக் கொடுத்துப் பரிசோதனை செய்யப்படுகிறது. காரணம், பக்கவிளைவுகள் எதுவும் ஏற்படாது என்பதே.

# 'உப்பு' மருத்துவம்!

"மகாலட்சுமிக்கு வயது நாற்பத்தெட்டு. தினமும் காலை ஒன்பது மணி ஆகிவிட்டால் போதும். 'ணங், ணங்' என்று ஏதோ பாறையில் தலையை மோதுவது போன்ற வலி ஆரம்பித்துவிடும். கிட்டத்தட்ட பன்னிரண்டு வருடங்கள் ஆட்டிப்படைத்தது. போகாத மருத்துவமனைகள் இல்லை. பார்க்காத டாக்டர்கள் இல்லை. கடைசியாக ஹோமியோபதி சிகிச்சையின் மூலம் தலைவலி தலை தெறிக்க ஓடிவிட்டது'' என்கிறார் ஹோமியோபதி நிபுணர் டாக்டர் என்.ஆர்.ஜெயக்குமார்.

''அந்தப் பெண்ணுக்கு எப்படிக் குணமானது தெரியுமா? முதலில் எந்த மாதிரியான அறிகுறிகள் ஏற்படுதுன்னு விசாரிச்



உதாரணத்துக்கு ஜலதோஷம், தலைவலியின்போது கண்ணிலிருந்தும் நீர் வடியும். வெங்காயத்தை உரிக்கும்போது கண்ணிலிருந்தும் மூக்கிலிருந்தும் நீர் வடியும். ஹோமியோபதி முறையில், வெங்காயத்திலிருந்து

மருந்து உருவாக்கப்பட்டு தலைவலி, ஜலதோஷம், சளிப் பிரச்னைகளுக்குக் கொடுக்கப்படுகிறது!

இரத்த அழுத்த நோயை பின்விளைவுகள் இன்றி கட்டுப்படுத்தலாம். பொதுவாக பி.பி.யை, உப்பு அதிகம் சேர்த்துக்கொள்வதால் ஏற்படக்கூடிய பிரச்னை என்பார்கள். ஆனால், ஹோமியோபதி மருத்துவத்தில் பி.பி.க்கு உப்பிலிருந்து தயாரிக்கப்படும் மருந்தே கொடுக்கப்படுகிறது. இது, முள்ளை முள்ளால் எடுக்கும் மருத்துவம்.

மூட்டுவலியை ஹோமியோபதியில் முழுமையாகக் குணப்படுத்திவிட முடியும். பெரும்பாலும் மெனோபாஸ் ஆன பெண்களுக்கும் கர்ப்பப்பை அகற்றப்பட்ட பெண்களுக்கும் ஒன்றிரண்டு வருடங்களுக்குப் பிறகு ஆஸ்டியோ போரோஸிஸ் எனப்படும் எலும்புத் தேய்மானப் பிரச்னைகள் ஏற்படுகின்றன. அறிகுறிகளைப் புரிந்துகொண்டு, கால்ஷியம் சத்துள்ள மாத்திரைகளைக் கொடுத்து, வலியைக் குறைப்பதோடு, எலும்புத் தேய்மானம் ஏற்படாமலும் பாதுகாத்துக்கொள்ளலாம்.

* என். ஆர். ஜெயக்குமார்



சமீபகாலமாகவே பெண்கள் அதிகமாக சந்திக்கக்கூடிய ஒரு பிரச்னை, கர்ப்பப்பையில் நீர்க்கட்டி ஏற்படுவது. உடலில் பிட்யூட்ரி, தைராய்டு, ஓவரி ஆகியவற்றின் சங்கிலித் தொடர் போன்ற செயல்பாடுகள், ஹார்மோன்களின் சீரற்ற செயல்பாட்டால் பாதிக்கப்பட்டு, கர்ப்பப்பையில் நீர்க்கட்டிகள் தோன்றுகின்றன. இதற்கு ஹோமியோபதியில் பிட்யூட்ரி 'சுரப்பியிலிருந்து தயாரிக்கப்படும், பிட்யூட்ரினம், தைராய்டு சுரப்பியிலிருந்து தயாரிக்கப்பட்ட தைராய்டினம், ஓவரி சுரப்பியிலிருந்து எடுக்கப்பட்ட ஓஃபரினம் என மூன்று மருந்துகள் கொடுக்கப்படுவதோடு, மனரீதியான பாதிப்புக்கு ஏற்ற மருந்தும் கொடுத்து முழுமையாகக் குணப்படுத்தப்படுகிறது'' என்கிறார் டாக்டர் என்.ஆர். ஜெயக்குமார்.

– முரளி

# மனசெல்லாம் மண்வாசம் - 9



'முன்ளு மொனையிலே
மூணு கொளம்
வெட்டினேன்
ரெண்டு கொளம்
பாழு! - அதுல
ஒண்ணுலதான்
தண்ணியே இல்ல!
தண்ணியில்லா கொளத்துக்கு
வந்தவங்க மூணு பேரு
ரெண்டு பேரு நொண்டி!
நொண்டி! - அதுல
ஒருத்தருக்குக் கையே இல்ல!
கையில்லா குயவன் பண்ணுனது
மூணு பானை
ரெண்டு பானை பச்ச! பச்ச! -
அதுல
ஒண்ணுதாங்க வேகவே இல்ல!

வேகாத பானையில வேக வச்சேன்
மூணரிசி!
ரெண்டரிசி நெட்ட! நெட்ட! -
அதுல
ஒண்ணுதாங்க சோறே இல்ல!

**ந**ம் கிராமத்துச் சனங்களின் வெள்ளந்தியான மனத்திலிருந்து எந்தப் பொழுதும் எந்தச் சூழலிலும் இயல்பாகப் புறப்பட்டு வருகிறது பாட்டு. காற்று வந்து வருடும்போது அசையும் இலைதழைகளிலிருந்து புறப்படும் இசை போல. எளிமையான மெட்டு, அவர்களுக்கே உரிய வட்டார வழக்குச் சொற்கள், சிந்திக்கச் செய்யும் ஆழமான கருத்துகள். எவ்விதக் களைப்பையும் கவலையையும் போக்கிவிடுகின்றன.

அந்த மனிதர்கள் அன்றாடம் தங்கள் வாழ்வினூடே சந்திக்கும் நபர்களிடம் நகைச்சுவை இழையோடப் பேசுவார்கள். ஆனால், மனத்தைப் புண்படுத்தும் வஞ்சனை இருக்காது. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் இழிகுணம் அறியாதவர்கள். அவர்களுடைய அந்த வெள்ளை மனங்களைப் போலவே நகைச்சுவைப் பாடல்களும் இருக்கின்றன.

இப்படி வயிறு வலிக்கச் சிரிக்க வைக்கும் பாடல்களிலும்கூட ஒரு சில கருத்துகள் சிந்திக்க வைக்கின்றன. தான் செய்த ஒரு வேலை அப்படியொன்றும் சொல்லும்படியாக இல்லாவிட்டாலும் ஒரு சிலர் மிகப் பெரிதுபடுத்திக் கூறிக்கொள்வார்கள். அவர்களைத்தான் இந்தப் பாடல் கேலி செய்கிறது. மிகச் சிறிய இடத்தின் அளவைக் குறிக்கத்தான் முள் முனை அளவுக்கு என்று சொல்வார்கள். அந்த முள் முனையில் மூன்று குளம் வெட்டுவது எவ்வளவு அபத்தமான கற்பனை...?

புழுதி கிளப்பும் கிராமக் குழந்தை

புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

களின் விளையாட்டானது தமிழும் சொல்லிக் கொடுக்கும், கணக்கும் சொல்லிக் கொடுக்கும்.

கண்ணாமூச்சி ரே ரே என்று கண்ணைப் பொத்தி விளையாடும் விளையாட்டில் கண்ணை மறைத்தவர் கேள்வி கேட்க, மறைக்கப்பட்டவர் பதில் கூற வேண்டும். கூறப்பட்ட பதிலில் இருந்தே அடுத்த கேள்வி உடனே பிறக்கும். அந்த உத்தி குழந்தைகளின் முடிவெடுக்கும் திறனை வளர்த்துவிடுவதாக இருக்கிறது.

எந்த ஊர்? 'மயிலாப்பூர்', என்ன மயில்? 'காட்டு மயில்.' என்ன காடு? 'ஆற்காடு.' என்ன ஆறு? 'பாலாறு.' என்ன பால்? 'கள்ளிப் பால்.' என்ன கள்ளி? 'இலைக் கள்ளி.' என்ன இலை? 'வாழை இலை.' என்ன வாழை? 'கற்பூர வாழை.' என்ன கற்பூரம்? 'ரசக் கற்பூரம்.', என்ன ரசம்? 'பழரசம்.' என்ன பழம்? 'மாம்பழம்.' என்ன மா? 'அம்மா.' அம்மா மட்டும் தமிழ் சொல்லித் தரவில்லை. அம்மாவைச் சுற்றி அனைத்திலும் தமிழ் இருக்கிறது.

இந்த மாதிரியான விடுகதைகளைப் புனைந்து பாடல் பாடுவதைத்தான் 'அருணாச்சலம்' போன்ற திரைப்படங்களில் காண்கிறோம். மக்களிசைப் பாடல்களில் வழங்கி வரும் ஒருவகைதான் அது. விடுகதையும் அவ்வாறே... தாத்தா, பாட்டி சொல்லக் கேட்டும், தான் பார்க்கும் பொருள்களிலிருந்தும் குழந்தைகள் தானாகவே வாழ்க்கைக் கல்வியைக் கற்றுக்கொள்கின்றனர்.

***'ஒரு தாய் வயித்துக்குள்ளே / ஒளிஞ்சிருக்கு அஞ்சு புள்ளே - அவை என்ன?'***

விடை: தாய் - பசு; பிள்ளைகள் - பால், தயிர், மோர், வெண்ணெய், நெய்.

**ஒ**வ்வொரு மனிதனுக்கும் அவன் வாழ்கின்ற சூழலுக்குத் தக்கவாறு தர்க்க அறிவு தேவைப்படுகிறது. அதை அவன் பயன்படுத்தினாலும் பயன்படுத்தாவிட்டாலும் அவன் வாழ்க்கையில் குறுக்கிடு செய்துகொண்டேதான் இருக்கிறது. விடுகதைப் பாடல்களில் குழந்தைகளுக்குத் தத்துவங்களும் போதிக்கப்பட்டே வருகின்றன ஓர் ஆச்சர்யமான விஷயம்தான்.

***'இதுவரை எவரும் காணாதது./ இனிமேல் எவரும் காண முடியாதது./ வந்தால் நம்மிடம் தங்காதது / போனால் திரும்ப வராதது./ என்ன அது?'***

விடை: உயிரோ, பணமோ, கனாமியோ அல்ல. எப்போதும் நாம் நெருங்காத, நமக்கு முன்னே இருக்கும் 'நாளை' என்பதுதான் அது. 'நாளை' என்கின்ற ஒருநாள் நம்முடைய வாழ்வில் என்றுமே வருவதில்லை. வரும் நாட்கள் எல்லாமே இன்று என்கிற நிகழ்காலம் ஆகிவிடுகின்றன.

**எழுத்தாக்கம்: சிவன்**

**(அடுத்த வாரம் அனிதா குப்புசாமி)**

# கண்ணாமூச்சி ரே ரே!

# மலர்களின் மந்திரமொழி!

சன்னமான ஒலியுடன் காற்றில் தவழ்ந்து வரும் வேய்ங்குழல் இசையுடனும், வெகு நேர்த்தியாய்ப் பரப்பப்பட்டிருக்கும் பல்வகை மலர்களின் சுகந்த மணமுடனும் ரம்மிய சூழலில், அமைதியில் ஆழ்ந்த ஆன்மிக அன்பர்கள் தியானத்தில் இருக்கிறார்கள்!

சென்னை, மேற்கு மாம்பலத்தின் அயோத்தியா மண்டபம் எதிரில் அமைந்திருக்கும், ஸ்ரீ அரவிந்தர் அன்னை தியான மையத்தில்தான் அந்தக் காட்சி! அரிய வகை மலர்களையும், அவற்றின் மகத்துவங்களையும் மக்களுக்கு விளக்கும் விதமாக, ஒரு பிரம்மாண்ட மலர்ப் புகைப்படக் கண்காட்சிக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது இம்மையம்!

"புறச் சூழலில் மாற்றங்களை உருவாக்கும் சக்தி, ஒவ்வொரு மலருக்கும் இருக்குங்கற செய்தியை, ஸ்ரீ அரவிந்த அன்னை இந்த உலகத்துக்கு உணர்த்தியிருக்கறாங்க! ஸ்ரீ அரவிந்த அன்னையால அடையாளப்படுத்தப்பட்ட 898 வகையான மலர்களையும், அவற்றின் குணாதிசயங்களையும் மக்கள் தெரிஞ்சுக்கணும்ங்கற நோக்கத்தோட, ஜூலை 1ஆம் தேதியிலிருந்து இந்தக் கண்காட்சியை நடத்துறோம்!" என்கிறார் இம்மையத்தின் தலைவர் ஸ்ரீ அன்னை அடிகள்.

"இறை வழிபாட்டுக்காக மலர் தூவி அஞ்சலி செய்து வர்றது நம்ம பாரம்பரிய வழக்கம்! ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு விதமான வேண்டுதல் இருக்கும்! அந்தந்த வேண்டுதலுக்கு உரிய மலர்களை உபயோகித்து வழிபடறபோது வேண்டுதல்கள் அமைதியா நிறைவேறும்.



உதாரணமா, செம்பருத்தி வெற்றியை தேடித் தரும். அல்லிப்பூ செல்வம் சேர்க்கும். இப்படி அரவிந்த அன்னையால் நிரூபிக்கப்பட்ட பலவகை மலர்கள் இருக்கு. நாம அந்தப் பூக்களோட உன்னதத்தைத் தெரிஞ்சுக்கணும்! மலர்கள் நம்ம வாழ்க்கையை மகத்தானதாக உயர்த்தும்ங்கற உண்மையைப் புரிஞ்சுக்கணும்! அதற்கான முயற்சிதான் இந்தக் கண்காட்சி!" என்றவர், தியான மையம் குறித்தும் பேசினார்.

"பாண்டிச்சேரிக்குப் போய் வழிபட்டு வரமுடியாத ஸ்ரீஅரவிந்த அன்னையின் அன்பர்களுக்கு, இந்த மையம் ஓர் ஆறுதல் தலம்! இங்கே தினமும் வர்ற நூற்றுக்கணக்கான அன்பர்கள், தங்கள் அன்றாட வாழ்க்கையில் ஸ்ரீ அரவிந்த அன்னை நிகழ்த்தும் அற்புதங்களை உணர்வுபூர்வமாச் சொல்லும்போது, இந்த மையத்துக்கு இருக்கிற சக்தி புலப்படுது" என்கிறார் ஸ்ரீ அன்னை அடிகள்.

ஏதோவொரு அற்புதமான செய்தியினை அந்த மலர்கள் அமைதியாகச் சொல்லிக்கொண்டிருக்கின்றன என்பதை அந்தத் தியான மையம் படம்பிடித்துக் காட்டுகிறது.

- எம்.ஆர்.இராஜேந்திரன்

